இங்கிலாந்திற்

# கூட்டுறவு இயக்கம்



கும்பகோணம் டவுன் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்
ஊ. சா. வேங்கடராமையர்
எழுதியது



துரைத்தனத்தார் அங்கீகாரம் செய்தது
(10—6—1924 கெஜட்: 502-வது பக்கம்)

இரண்டாம் பதிப்பு

பதிவுசெய்தது] 1935 [விலை அணா ஆறு

"காகம் உறவு கலந்துண்ணக்

கண்டீர் அகண்டா காரசம

போகம் எனும்கூட் டுறவுவெள்ளம்

பொங்கித் ததும்பிப் பூரணமாய்

ஏக உருவாய்க் கிடக்குதந்தோ

இன்புற் றிடநாம் இனியெடுத்த

தேகம் விழுமுன் புசிப்பதற்குச்

சேரவாரும் சகத்தீரே."

# உரிமை உரை

உலகினர் இன்பமே வேண்டுவர் ஒருதலை
அவ்வுயர் இன்பமோ செவ்விய சுதந்தர
புருடர்கட் குறுவதப் புண்ணியப் பேறே
அடிமைகட் கில்லைஈண் டாதலின் அனைவரும்
அடிமையில் விடுதலை பெற்றுயர் ஆள்பவர்
ஆகவே முன்னுவர் முயலுவர் அங்ஙனே
தம்முறு தாழ்வைச் செம்மையின் அகற்றி
மேன்மேல் ஓங்கற் கென்றினி தாய்ந்தாய்ந்
தேற்றதாக் கூட்டு மனிகையைப் பேற்றிஈங்
குற்றநல் இன்பமே பெற்றுவாழ் பவராம்
எங்கும் புகழார் இங்கிலந் தைச்சேர்
ராஸடேல் நியாய வழிகாட் டிகள்தம்
வரலா றுகத் தரும்உரை நடைஇதைச்
சான்றோர் உடைத்தெனும் ஆன்றபேர் உரையைநம்
ஔவையார் வாக்காற் செவ்விதிற் பெற்றுயர்
தொல்சீர் பரவிய தொண்டைநல் நாட்டில்அச்
சான்றோர்க் கணிசமன் செய்துசீர் தூக்கும்
கோல்போல் அமைந்தொரு பாற்கோ டாமையே
என்றவள் ளுவர்வாய்ச் சொல்லினொ டொன்றிஅப்
பெருமையைச் சேர்ந்தோர்க் கருமையின் அளிக்கும்
துறையினிற் சிறந்த முறைஎனக் கருதிஅக்
கூட்டுமனி கையினை நாட்டி முதன்முதல்
செந்தமிழ் நாட்டிற் றந்துநற் சீர்த்தியொ
டெல்லா நலமுந் தருந்திரு வல்லிக்
கேணியில் நல்வழி காட்டிவாழ் கின்றஅவ்
உத்தமர் உழைப்பினுக் குவந்து
வைத்தனன் ஓர்அறி குறிஎன மதித்தே.

*" அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்*
*இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே."*

—தாயுமானவர்

# PREFACE

" The Soul of India is the Village. "*

" One of the most important Economic problems of India is the decline of the Indian village. This problem has not sufficiently attracted the attention of the educated Indians."*

There has been in recent times everywhere a tendency to desert villages and migrate to towns, producing that complex phenomenon in social and economic life known as "*Civilisation.*" In thus migrating from villages to towns the Indians are giving up the spiritual ideal of their forefathers in favour of the western materialistic ideals. " India practises the art of simplifying her natural wants so that she may be more self-centred and self-sufficient and may cultivate her moral and spiritual life with greater leisure and assiduity. The materialistic West has already begun to feel the pressure of her multiplying wants and in the feverish pursuit of the materials and instruments, she begins to realise that she is missing the inward satisfaction which is the end and goal. India can never wholly lose her discipline of the limitation of wants and the concentration of activities for the development of the Soul."*

Whatever may be the causes of the above change of ideals that is coming over India, shrewd men in all

---

* Radhakamal Mukarji—Foundation of Indian Economics.

quarters have realised that large towns and cities are the graveyards of men's *wealth*, *health* and *morality*.

The indebtedness of rural agriculturists, and the poverty and wretchedness of the large majority of those who struggle for existence in towns are only too well-known.

Educationists, Reformers and Statesmen are each in their own way endeavouring to *cure* the ills bred by this dire disease of Civilisation. Growth in the number of doctors and drugs has not always been followed by a diminution of diseases. But there is a healthy change coming about in the modern treatment of ills, *i.e.*, from the therapeautic to the prophylactic, *i.e.*, from the curative to the preventive treatment. An application of this new method to Indian ills would mean—Back to the village. The chief aim of every Indian patriot should be the revival of village life for the people. And it is admitted "that no movement is fraught with greater possibilities for the moral and economic betterment of villages than *co-operation*."*

"Before we can have a fully developed democracy the nation at large must possess those moral characteristics which have enabled co-operators to introduce democratic self-government into a certain portion of the industry, commerce and finance of the nation. It is therefore as moral reformers that co-operators deserve a place in the vanguard of progress." †

---

* Radhakamal Mukarji—Foundation of Indian Economics.

† Mrs. Sidney Webb.

It is a happy sign of the times, that side by side with the growing desire for democratic self-government on the part of the people, there is also set on foot among the people—The Co-operative Movement—to enable them to cultivate the capacity for self-help and self-government in looking after their own concerns financial, commercial and industrial. As yet in India the movement is but in its infancy ; and the people who are called upon to put into practice the method known as Co-operation, are not in a position to grasp the economic and the ethical principles underlying the co-operative system which in its material form and structure is a plant of foreign growth.

England and Germany have each its own co-operative history and the student of co-operation in our country must needs acquaint himself with the best product of co-operation in these countries. The Literature of Co-operation is mainly in foreign languages. Co-operators in India are mostly villagers unacquainted with any but their own vernacular languages. Therefore every Indian who would help in the dissemination of co-operative literature must welcome any contribution in vernaculars to the literature of co-operation.

The author of this booklet is known to me personally and is an ardent worker in the field of co-operative propaganda. In my co-operative excursions into the villages of the Tanjore District, he has been a fellow-worker. He has written several useful tracts in Tamil on co-operative subjects and is a diligent contributor to the Tamil Periodicals of our Presidency. His faith in

the efficacy of the movement as a moral regenerator of mankind, his extensive knowledge of co-operative literature and the ease with which he writes Tamil, justly entitle his book to be read by all co-operators in the Tamil country.

As an ardent fellow-worker in co-operative propaganda, I commend this to all well-wishers of co-operation in this Presidency.

It is in the fitness of things that the author has dedicated the book to the first members of the Triplicane Urban Co-operative Society.

KUMBAKONAM,
*20th July*, 1923.

T. K. HANUMANTHA RAU.

# முன்னுரை

" எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே."

—தாயுமானவர்

உலகத்திலே தோன்றிய மக்களாவார் அனைவரும் ஒருநிலையாக வேண்டுவது இன்புற்றிருத்தலையே. இன்பமோ துன்பநீக்கத்தின் பின்னர்க் கிட்டுவது. துன்பநீக்கமோ பொருளுடைமையாலும் சுதந்தரப்பேற்றாலும் உண்டாவதாம்.

இங்ஙனமே ஒவ்வொருவரும் பொருளுடையராகிச் சுதந்தரத்துடன் துன்பத்தினின்றும் விடுபட்டு இன்புற்றிருக்கும் நிலைமையிலுள்ள நாடே உலகத்திலே தலையாய சிறந்த நாடென அறிவுடையோரால் கருதப்படுகிறது.

இத்தகைய தலையாய சிறந்த பெருமை நமது தாய்நாட்டிற்கும் உண்டாகவேண்டும் என்ற பேராவாகதூண்ட அதன் பயனாக இச்சிறு புத்தகம் அடியேனால் எழுதி வெளியிடப்படுகிறது.

இது பெரும்பாலும் மான்செஸ்டர் பட்டணத்திலுள்ள கூட்டுறவுச் சங்கத்தார் வெளியிட்ட "நமது கதை" என்ற ஆங்கிலப் புத்தகத்தைத் தழுவி எழுதப்பட்டது.

அப்புத்தகம் முதல்முதல் (அக்டோபர் 191 ) ஐயாயிரம் பிரதிகளாக வெளிவந்தது. அஃது இப்பொழுது (நவம்பர் 1919) அடியேற்குக்கிடைத்த பதினொன்காவது பதிப்பாகவும் வெளிவந்துள்ளது. இதுவரையில் இன்னும் பல பதிப்புக்கள் வெளிவந்திருக்கலாம்.

அன்றியும், அப்பதினொன்கு பதிப்புக்களிலுமாக மொத்தம் ஆறு லட்சத்து நாற்பத்தோராயிரம் (641,000) புத்தகங்கள் வெளிவ

திருக்கின்றன என்றால் அதன் பெருமையும், பிறவும் இனிது விளங்கும் என்பது ஒருதலே. நிற்க

இந்த மாகாணத்திலுள்ள ஐக்கியவாதிகளில் தலைசிறந்தவர்களும், கும்பகோணம் துரைத்தன உயர்தரக் கல்லூரியில் உயர்தரப் போதகாசிரியர்களாக இருந்து உபகாரச்சம்பளம் பெற்றுச் சுகஜீவனம் செய்துவருகின்றவர்களும். அடியேற்குக் கூட்டுறவு இயக்கத்தின் தத்துவங்களை அடிக்கடி போதித்து வருகின்றவர்களுமாகிய ஸ்ரீமான் ராவ் சாகிப் தோ. கி. ஹனுமந்த ராவ், பி.ஏ., எல். டி. அவர்கள் இதற்கு ஓர் அணிந்துரையை வரைந்துதவியமைக்கு அடியேன் அப் பெரியார்மாட்டு என்றும் பெரிதும் நன்றியறிதலுள்ளவனு யிருக்கின்றேன்.

இச் சிறு புத்தகத்தை நமது மாகாணத்தலைநகராகிய சென்னையிலுள்ள திருவல்லிக்கேணி அர்பன் கூட்டுறவு பண்டசாலையை முதல் முதல் நிலையிட்ட அங்கத்தினர்களாகிய பேரருளாளர்களது நல்லுழைப்புக்குப் பெருமகிழ்ச்சியுடன் உரிமையாக்குகின்றேன்.

இதிற் காணும் குற்றங்களைப்பொறுத்து அடியேனை நல்லாற்றுப் படுத்துமாறு அறிஞர்களை வேண்டுகின்றேன்.

ஒன்றற்கும் பற்றாத அடியேனை இத்துறையாலும் தண்டமிழ்த் தொண்டு புரியுமாறு அருள்சுரந்த எல்லாம்வல்ல இறைவனது திருவருளை வியந்து மகிழ்ந்து வணங்குகின்றேன்.

நாராயண விலாசம்,
கும்பகோணம்.
1—7—1923.

இங்ஙனம்
உ௸ சா. வேங்கடராமன்,
தண்டமிழ்த்தொண்டன்.

"ஒன்றுபட டால்உண்டு வாழ்வே—நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வே
நன்றிது தேர்ந்திடல் வேண்டும்—இந்த
ஞானம்வந் தால்பின் நமக்கெது வேண்டும்
ஒன்றுபட் டால்உண்டு வாழ்வே."

—பாரதியார்

“உண்டால் அம்மஇவ் உலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே முனிவிலர்
துஞ்சலும் இலர்பிறர் அஞ்சுவது அஞ்சிப்
புகழெனின் உயிரும் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர் அயர்விலர்
அன்ன மாட்சி அனையர் ஆகித்
தமக்கென முயலா நோன்றாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே.”

—பாண்டியன் கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி

# இங்கிலாந்திற் கூட்டுறவு இயக்கம்

## தொழிலாளரது முன்னேற்றம்

### முற்கால நிலைமை

இங்கிலாந்திலே இயந்திரங்கள் முதலாகிய கருவிகள் கண்டுபிடிக்கப்பட்ட காலத்திற்கு முன்னர்க் கைத் தொழிலாளர்கள் மிகச் சிறிய குடிசைகளிலே வாசம் செய்து வந்தார்கள். அக் குடிசைகளோ குகைகள் போல மிக இருளடர்ந்தன; தம்மிடம் வாசம் செய்பவர்களுக்கு இன்பம் எத்தன்மைத்து என்பதைத் தெரிவிக்கவும் இயலாதன; காற்றோட்டத்தைக் கண்டிராதன; சூரியனது ஒளியே தோன்றாதன; உணவினைச் சுத்தமாக வைத்துக்கொள்ளத் தக்க வசதிகளைப் பெற்றிராதன.

சுகாதாரக் கேடுகள் பலவும் நிரம்பிய இத்தகைத் தகாத இடங்களிலே குடியிருந்துகொண்டுதான் தொழிலாளர்கள் மிக நேர்த்தியான நூல்களை நூற்றும், துணிகளை நெய்தும் விற்றுப் பொருளீட்டி வயிறு வளர்த்து வந்தார்கள். எனினும், அவர்கள் தங்கள் தங்களுடைய குடிசைகளிலேயே இருந்து வேலைசெய்து வந்தார்கள். அதனால் அவர்களுக்குப் பிறர்க்குக் கட்டுப்பட்டு நடக்கவேண்டிய அவசியமில்லாதிருந்தது. அன்றியும், அவர்கள் தங்

களுக்குத் தாங்களே எஜமானர்களாக இருந்தார்களாதலின், இஷ்டம்போல வேலைகளைச் செய்துவந்தார்கள், வேலை செய்யாத வேளைகளிலும், மனம் உற்சாகமற்றிருந்த வேளைகளிலும், தங்கள் தங்களது குடிசையைச் சுற்றிலும் உள்ள தோட்டம் முதலாயவற்றைச் சுற்றிப் பார்ப்பதிலும், பிற கண்காட்சிகளைக் காண்பதிலும் பொழுதைப் போக்குவார்கள். வியாபாரம் நல்ல பயனைத் தராவிடில் விவசாயத்தைக் கைக்கொள்வார்கள்; விவசாயம் நல்ல பயனைத் தராவிடில் வியாபாரத்தைக் கைக்கொள்வார்கள்.

இவற்றால், அத் தொழிலாளர்கள் மக்களது உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாதனவாகிய உண்டி, உடை, உறையுள் என்ற மூன்றன் பொருட்டும் பெரிதும் வருந்திப் பாடுபட்டு வந்தார்களாயினும், அவர்கள் அக்காலத்திலேயும் சுயேச்சையின் இன்பத்தை நுகர்ந்து சுதந்தர புருஷர்களாக வாழ்ந்து வந்தார்கள் என்பது அறியப்படுகிறது. ' தமைப் பிறர் ஏவாமல் உண்பதே ஊண் ' என்பது பெரியோர் வாக்கு.

## நிலைமை மாறுதல்

இங்ஙனம், அவர்கள் சுயேச்சையாக வாழ்ந்து வருங்கால் வாட், ஹார்க்ரீவ்ஸ், ஆர்க்ரைட், கிராம்டன் போன்றவர்கள் தங்களுடைய சூட்சுமமான புத்திவன்மையினாலே பல இயந்திரங்களைக் கண்டுபிடித்தார்கள். உடனே பல பெரிய முதலாளிகள் பெரிய பெரிய தொழிற் சாலைகளைக் கட்டினார்கள்; பலவகை இயந்திரங்களையும் ஸ்தாபித்தார்கள்; அவற்றில் அத் தொழிலாளர்களை வேலை செய்யுமாறும் கட்டாயப்படுத்தினார்கள் மிகக் குறுகிய

இடத்தை உடையனவும், காற்றோட்டம் முதலாய சுகாதார வசதிகளைப் பெற்றிராதனவும், இருளடர்ந்தனவுமாகிய தங்களுடைய குடிசைகளில் இருந்து தொழில் செய்வதிலும் மேலானதாக, மிக அழகாக அமைக்கப்பட்டுச் சுகாதார வசதிகளைப் பெற்றிருந்த அத் தொழிற்சாலைகளிற் போய் வேலை செய்வதை அவர்கள் முதலில் விரும்பவில்லை. ஏனெனில், அவர்கள் அங்கே தாங்கள் தங்களுடைய குடிசைகளிலே அநுபவித்துவந்த தங்களது சுயேச்சையை இழக்க நேர்ந்ததாதலின் என்க. என்ன செய்வார்கள்? பாவம்! பசிவந்திடப் பத்தும் பறந்துபோமல்லவா?

இங்ஙனமாக, அத் தொழிற்சாலைகளுக்கு வேலைக்குச் செல்லாவிடில் அவர்களுக்கு வயிற்றுப் பிழைப்புக்கு வேறு வழி இல்லாது போயிற்று. பட்டினி கிடந்து இறக்கச் சாமானியருக்கு மனம் வருமா? வாராதன்றோ? ஆதலின், அவர்கள் அத் தொழிற்சாலைகளில் வேலைக் கமரலானார்கள். இயந்திரங்கள் எல்லா வேலைகளையும் செய்துவிடுகின்றமையின் அவர்களுக்கு மூளையின் வேலை இல்லாதுபோயிற்று. வேலை இல்லாது போகவே அதன் சக்தியும் குறைவுற்றது. நாளடைவில் அவர்கள் கால்நடைகள்போலக் கை கால்களால் மாத்திரம் உழைத்து மிகத் தொல்லையான வேலைகளைச் செய்யவேண்டியவர்களானார்கள். மிகக் கடினம், புத்திவன்மை ஆகியவற்றோடு கூடிய வேலைகளைச் செய்ய இயந்திரங்கள் அமைந்துவிட்டன. ஆதலினாலே, பலவான்களும் புத்திமான்களும் ஆகிய அத் தொழிலாளர்களுடைய வேலைகளைக் காட்டிலும் அவர்களுடைய பெண்பாலர்கள், குழந்தைகள் முதலானவர்களுடைய வேலைகளே அத் தொழிற்சாலைகளின் முதலாளிகளாற் பெரிதும் விரும்பப் பட்டன.

அத் தொழிலாளர்களுக்குக் கொடுக்கவேண்டிய கூலி விகிதத்தைக் காட்டிலும் இப் பெண்பாலர்களுக்கும் குழந்தைகளுக்கும் கொடுக்கவேண்டிய கூலி விகிதம் குறைவாயிருந்ததே இதற்குக் காரணம். செலவுக் குறைவுக்கான வழியைக் கண்டுகொண்ட பணத்தாசை பிடித்த முதலாளிகள் சும்மா இருப்பார்களா? உடனே அத் தொழிலாளர்களை வேலைக் கமர்த்திக்கொள்ளாது பெண்பாலர்களையும் குழந்தைகளையுமே வேலைக் கமர்த்திக்கொள்ளலானார்கள். இதனால் பல தகுதியுடைய தொழிலாளர்களுக்குப் பிழைக்கும் வழியில்லாது போயிற்று. இம்மட்டோ அத் தொழிலாளர்களது நிலைமை! தாங்கள் பொருளீட்டிக் காப்பாற்ற வேண்டிய பெண்பிள்ளைகளைத் தங்களது உணவின் பொருட்டும் பொருளீட்டி வருமாறு அத் தொழிற்சாலைகளில் தாங்களே வலிவிற் சென்று வேலைக் கமர்த்தவேண்டிய நிலைமைக்கும் வந்துவிட்டார்கள்.

கல்நெஞ்சர்களான முதலாளிகளோ அப் பெண்மணிகளையும், பாலர்களையும் நாள் ஒன்றுக்குச் சுமார் பதினைந்து மணி நேரம் வேலை செய்யச் செய்தார்கள். வேலை செய்யும் காலத்தில் அவர்கள் படும் கஷ்டத்தை எடுத்துச் சொல்ல எவர் மனந்தான் துணியும்? நின்றுகொண்டே தூங்குகின்றவர்களும், தூங்கிக்கொண்டே வேலையைச் செய்கின்றவர்களும், வேலையைச் செய்துகொண்டே உண்பவர்களும் ஆக அவர்கள் மாறினார்கள் என்றால், அக் கஷ்டத்தை அதிகம் சொல்லுவானேன்! தங்களுடைய குழந்தைகளை ஆடை அணிகளால் அலங்காரம் பண்ணி அழகு பார்த்துக் கொஞ்சி விளையாடும் அந்த முதலாளிகள், தொழிலாளர்களின் குழந்தைகள் படும் கஷ்டத்திற்கு மனமிரங்காதது மாத்திரமன்று; அக் குழந்தைகளைத் துன்புறுத்தி வேலை வாங்கியும் வந்தார்கள்.

இவ்வளவோடு நின்றுவிடவில்லை அந்த முதலாளிகள். வெளியூர்களுக்குக் கண்காணிகளை அனுப்பி ஆங்காங் குள்ள குழந்தைகளையும் விலைக்கு வாங்கி வந்தார்கள்; அவர் களைத் தங்களுடைய அடிமைகளாக்கித் தொழிற்சாலை களில் வேலைக்கமர்த்தினார்கள். என்ன கஷ்டம்! பால்மணம் மாறாத பாலகர்கள், தங்களுடைய பெற்றோர்களைப் பிரிந்து பிற நாடுகளில் அடிமைகளாக நேர்ந்தது! என்ன செய்வார் கள் வாயில்லாப் பூச்சிகளாகிய தொழிலாளர்கள்! ஏழைக் கிரங்குபவர்களே இல்லாது போயிற்று. இத்தகைக் கஷ்டத்திற்குள்ளான அவர்களது உழைப்பால் அக் கல் நெஞ்சர்களான முதலாளிகள் கோடிக்கணக்காகப் பொருளைத் தேடிக்கொண்டார்கள். இவ்வளவு கஷ்டத்திற் கும் அத்தொழிலாளர்களை உள்ளாக்கியது வறுமையல்லவா? ஆ! வறுமையே!! உனது ஆற்றலை என்னென்று கூறுவது? இதுபற்றியன்றே

"இன்மையின் இன்னாதது யாதெனின் இன்மையின்
இன்மையே இன்னா தது."

"தரித்திரம் மிக்க வனப்பினை ஒடுக்கிச்
சரீரத்தை உலர்தர வாட்டும்
தரித்திரம் அளவாச் சோம்பலை எழுப்பும்
சாற்றரும் உலோபத்தை மிகுக்கும்
தரித்திரம் தலைவன் தலைவியர்க் கிடையே
தடுப்பரும் காலாம்பல விளைக்கும்
தரித்திரம் அவமானம் பொய் பேராசை
தரும் இதிற் கொடிய தொன் றிலையே"

என்றுள்ள பெரியோர் வாக்குக்கள் எழுந்தன?

கொடுத்து வாங்கிவந்தார். அவற்றை வாங்கின விலைக்கு மேலே போகாமல் விற்றுவந்தார். இதனால் அத்தொழிலாளர்களுக்கு நூற்றுக்கு இருபத்தைந்து வீதம் உணவுப்பொருள்களின் செலவு குறைந்து பொருள் மிகுதிப்படலாயிற்று. நல்லுணவும், நன்னடக்கையும் அவர்களிடமிருந்த தீச்செயல்களை மாற்றத் தொடங்கின.

இப்படியாக, நமது ராபர்ட்டு ஓவன் என்பவர் இம்மட்டோடு நின்றுவிடவில்லை. அந்த ஏழைத் தொழிலாளர்களுடைய குழந்தைகளையுஞ் சீர்திருத்த முயன்றார். அவ்வூரில் அக்காலத்திற் குழந்தைகளுக்குக் கற்பிக்கும் பள்ளிக்கூடமேயில்லை. ஆனால், தாய் தந்தையரை இழந்து திக்கற்றவர்களாகச் சுமார் ஐந்நூற்றுக்கு மேற்பட்ட குழந்தைகள் இருந்தார்கள். அதுவரையிற் குழந்தைகளின் பள்ளிக்கூடமென்பதே இல்லாதிருந்த இங்கிலாந்தில் முதல்முதல் இவர்தாம் அத்தகைப் பள்ளிக்கூடத்தை ஸ்தாபித்தார்; நடப்பதற்குப் போதிய வயது வந்த எல்லாப் பிள்ளைகளையும் அப்பள்ளிக்கூடத்திற் சேர்த்துக்கொண்டார்; குழந்தைகளிடம் கடுமையாகப் பேசுதலும் கூடாதென்றும், ஆனால் எப்பொழுதும் அவர்களைச் சந்தோஷமாக இருக்கும்படி செய்ய வேண்டுமென்றும் உபாத்தியாயர்களுக்குக் கண்டிப்பான உத்தரவினைச் செய்தார்.

அக்காலத்திற் பெரிதும் புத்தகங்கள் கிடையா. ஆதலின், பதுமைகளைக்கொண்டும் படங்களைக்கொண்டுமே குழந்தைகளுக்குக் கல்வியைக் கற்பித்து வந்தார்கள். அந்தப் பள்ளிக்கூடத்துக்கென்று விசாலமான விளையாட்டிடங்களும் இருந்தன. பொதுஜனங்கள் அந்தப் பள்ளிக்கூடத்தை ஓர் ஆனந்தமடம் எனக் கருதினார்கள். நாளடைவிலே தொழிலாளர்களுடைய குழந்தைகளெல்லாம் அப்

பள்ளிக்கூடத்திலே படிக்கத் தொடங்கின. பன்னிரண்டு வயதான பின்னர்ப் பாலர்களுக்குப் பலவகைக் கைத்தொழில்களையும் கற்பிக்குமாறு செய்தார். முக்கியமாகப் பருத்தி சம்பந்தமான கடைதல், கொட்டை வாங்கல், பட்டைபோடல், கதிர் சுற்றல், நூற்றல், அச்சுக்கட்டுதல், பாகு போடுதல், நெய்தல் முதலிய பல துறைகளிலும் அவர்களைப் பழக்கிவந்தார். ஓய்வு நேரங்களிலே தொழிலாளர்களுக்குச் சுகாதாரம், கூட்டு வியாபாரம் இவற்றைப்பற்றிப் போதித்து வந்தார். இவர் தொழிலாளர்களுடைய நலத்தையே நாடியவராதலின் அவர்களிற் பலர்க்கும் வீடுகளைக் கட்டிக் கொடுத்தார்; அவர்களது சம்பளத்தை உயர்த்தினர்; வேலை நேரத்தைக் குறைத்தார்; பல பிரசங்க மண்டபங்களையும் புத்தகசாலைகளையும் ஸ்தாபித்தார். இவற்றால் அந்த நியூலானர்க்கு என்னும் ஊர் இங்கிலாந்துக்குத் திலகம் போல விளங்கியது. அது பிற ஊர்களைப் பார்த்து பரிகசிப்பது போலும் விளங்கியது.

இவ்வாறு ராபர்ட்டு ஓவன் என்பார் தொழிலாளர்களுடைய நன்மைகளை நன்கு கவனித்து வந்ததால், பிற முதலாளிகள் பயமுறுத்திவந்தபடி இவர் வறுமையாளராகி விடவில்லை. 'ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும்' என்றபடி இவருக்கு மேன்மேலும் பொருட் செல்வம் பெருகிக்கொண்டே வந்தது. இதனால் இவர் தாம் செய்துவருவனவற்றைப் பின்பற்றுமாறு தம்மை ஒத்த பிற தொழிற்சாலைத் தலைவர்களுக்கும் விளக்கிச் சொல்லத் தொடங்கினர்.

" தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார் "

என்பது மறை மொழி யல்லவா?

நிற்க, ‘ ஐக்கியத்தினாலேதான் ஜனங்களுக்கு க்ஷேமம் உண்டாகும்’ என முதல் முதல் வற்புறுத்தியவரும் இவரே. இவரை வெறுத்த பிறர் “ சம்பளத்தை உயர்த்துவதாம்; வேலை நேரத்தைக் குறைப்பதாம்; குழந்தைகளிடம் வேலை வாங்கக்கூடாதாம்; என்ன அநியாயம்; ராபர்ட் ஓவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது போலும்!” என்று இவருடைய அன்பு ததும்பிய செய்கைகளைக் கண்டு அவற்றின் பெருமையை அறியும் ஆற்றலின்றி நகைக்கலாயினர். எனினும்,

“ அவமதிப்பும் ஆன்ற மதிப்பும் இரண்டும்
மிகைமக்க ளால்மதிக்கற் பால—நயமுணராக்
கையறியா மாக்கள் இழிப்பும் எடுத்தேத்தும்
வையார் வடித்தநூ லார்.”

என்றபடி இவர் அப்பிறர்களுடைய உரைகளால் மனந்தளரவில்லை; முன்னினும் அதிகமாக ஊக்கத்துடன் உழைத்துவரலாயினர்; தொழிலாளர்களது நன்மையைப்பற்றிச் சட்டம் ஒன்றைச் செய்யவேண்டும் எனப் பெருங்கிளர்ச்சியையும் செய்யலாயினர்; இடையிடையே தொழிலாளர்களுக்கு ஒப்புரவு, ஒற்றுமை, உண்மை, சிக்கனம், ஐக்கியம், ஒருவருக்கொருவர் உதவிசெய்துகொண்டு தங்களைத் தாங்களே உயர்த்திக்கொள்ளப் பழகுவது ஆகியவற்றைப்பற்றிப் பல உபநியாசங்களையும் செய்துவருவார். இம்முயற்சியின் பயனாகச் சில தொழிலாளர்கள் தொடக்கத்திற் பெரிதும் கஷ்டப்பட்டு ஆக்காங்குக் கூட்டு மளிகைகளை ஏற்படுத்திக் கொண்டார்கள்; கூட்டுறவு முறையில் பத்திரிகைகளையும் வெளியிட்டார்கள். நல்ல காலமும் வந்தது. நல்லாரைக் காணல், அவர்களுடன் கூடிவாழ்தல், அவர்களுடைய சொற்களைக் கேட்டல், அவற்றின்படி நடத்தல் ஆகியவை நன்மையைத் தருவனவன்றோ?

---

## நற்காலம்

இப்பால் (1815—1819) நமது ராபர்ட்டு ஓவன் துரைமகனாரும் வேறு சிலரும் ஒன்று சேர்ந்தனர்; பொருளாளர்களும், கல் நெஞ்சர்களும் ஆகிய முதலாளிகள் தங்களிடம் வேலை செய்யும் ஏழைத்தொழிலாளர்களைக் கருணையின்றி, வதைபுரிதற்குச் சமமாக வேலைவாங்கி வருவதைக் கண்டித்தனர்; அதைப்பற்றி அடிக்கடி ஆங்காங்கு விரித்துரைக்கலாயினர். அதனாற் பொது ஜனங்களின் உணர்ச்சி மாறுபடலாயிற்று. அதன் பிறகு தொழிலாளர்களுடைய கஷ்டங்களை விசாரித்தறியவும், அவர்களுக்கு எவ்விதம் நன்மையைப் புரியலாம் என்பதைப்பற்றிய ஆலோசனைகளைக் கூறவும் ஒரு பஞ்சாயத்து நியமிக்கப்பட்டது. அதன் பயனாகத் தொழிலாளர்களுடைய நலத்தைக் காக்கும்பொருட்டுப் பார்லிமெண்டு சபையில் ஸர் ராபர்ட்டு பீல் என்பவர் ஒரு மசோதாவைக் கொண்டுவந்தார். அதைப்பற்றி நான்கு வருஷங்கள் வரையில் அவர் விடாது அச்சபையில் வாதாடினார். கடைசியாக மலையைக் கல்லி எலியைப் பிடித்த கதை போலப் பயனற்றமாதிரியில் அச் சட்டத்தைப் பார்லிமெண்டு சபையார் நிறைவேற்றிவைத்தனர்.

---

## ஆஷ்லே பிரபு

இந் நிலையில், நமது ராபர்ட்டு ஓவன் துரைமகனாருக்குத் துணையாக நிற்பார் ஒருவருமில்லையே எனக் கருணை கூர்ந்த கடவுள் பிறிதொரு தூய்மையாளரைத் தொழிலாளர்களின் நன்மையின் பொருட்டுப் படைத்தருளினார். அவர் பெயர் ஆஷ்லே பிரபு என்பது. இவர் பெரும் பொருளாளர் வீட்டிற் பிறந்தவர். எனினும், பெற்றோர் இவரை மிகக் கொடுமையாகவே வளர்த்து வந்தனர்.

அதிகம் சொல்லுவானேன். பெற்றோரைப் பார்ப்பதற்கும் இவர் நடுங்குவாராம்.

இவர் தமது ஏழாவது வயதிற் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பப்பட்டார். அவ்விடத்தில் இன்னும் இவருக்குத் துன்பம் அதிகப்பட்டது. தாராளச் சிந்தையும், சம நோக்கும், மனத்தூய்மையு முள்ள இவர் "அந்தப் பள்ளிக்கூடத்தைப்போல் விகாரமானதும், அசுத்தமான தும், துன்பந்தரத்தக்கதும் பிறிதொன்றில்லை" என்று பின்னொரு காலத்தில் எழுதியிருப்பதிலிருந்து அஃது அறியப்படுகிறது.

இவர் தக்க வயது வந்தவுடன் நமது ஒவனுடைய வேலையைப் பகிர்ந்துகொண்டார்; இடைவிடாமல் பார்லி மெண்டு சபையிலே தொழிலாளர்களுடைய கஷ்டத்தை எடுத்துரைத்தார்; தமக்குத் துணையாகச் சில அங்கத் தினர்களையும் சேர்த்துக்கொண்டார்; பொதுவாகத் தொழி லாளர்களுடைய வேலை நேரத்தைக் குறைக்கும் வண்ண மும், குழந்தைகளைச் சுரங்கங்கள் ஆலைகள் புகைக்குழாய் கள் முதலியவற்றில் வேலை செய்யுமாறு வற்புறுத்தாம லிருக்கும் வண்ணமும் சட்டங்களைச் செய்வித்தார். படிப்பு சம்பந்தமாகவும் இவராலே சில நல்ல மாறுதல்கள் செய்யப்பட்டன. அக்காலத்திற் குழந்தைகளுக்கு வாரத் திற்குச் சுமார் நான்கு அல்லது ஐந்து மணி நேரம் படிப்புச் சொல்லிக் கொடுத்தாற் போதுமானது என்றிருந்தது. இதனால் முதலாளிகள் ஞாயிற்றுக்கிழமையைப் பள்ளிக்கூட நாளாக வைத்துக்கொண்டிருந்தார்கள். இவர் "ஞாயிற்றுக் கிழமை மத சம்பந்தமுள்ள நாளாதலின் அன்று மத சம்பந்தமாகவேதான் படிக்கவேண்டும்" எனக் கூறி அதனையும் மாற்றினார்.

இதுதான் கட்டாயப் படிப்புக்கு விதைபோடப்பட்ட காலம். தற்காலத்திலோ சரியான காரணமின்றிப் பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பாதிருக்கும் பெற்றோர்கள் குற்றவாளிகளாகக் கருதப்பட்டுச் சட்டப்படி அபராதத்திற் குள்ளாக்கப்படுகிறார்கள். 'எவரும் படித்தே தீர வேண்டும்' என்ற இந்த உணர்ச்சி உண்டாவதற்கு முதன் முதலில் விதைபோட்டவர் இவரே. நல்ல நிலத்திற் புதைக்கப்பட்ட விதை உரிய காலத்தில் எங்ஙனம் இனிது வளர்ந்து நல்ல பயனைத் தருமோ, அங்ஙனமே தொழிலாளர்களுடைய நலத்தை நாடிப் பெரிதும் ஊக்கத்துடன் உழைத்து வரும் உத்தமர்களாகிய இவ் விருவர்களது உழைப்பும் நாளடைவிற் பெரும் பயன் தருவதாயிற்று.

## ராஸ்டேல் வழிகாட்டிகள்

இந்தியாவில் ஸ்ரீகாசிபோன்ற புண்ணிய பூமிகளை எங்ஙனம் இந்தியர்களாகிய நாம் விசேஷமுள்ளனவாகக் கருதுகின்றோமோ, அங்ஙனமே பூவுலகு முழுவதும் இந்த ராஸ்டேல் பட்டணத்தை ஒரு விசேஷ பூமியாகக் கொண்டாட வேண்டும். ஏனெனில், அச் சிறு பட்டணத்திலேதான் தொழிலாளர்களை முதலாளிகளாகச் செய்து உயர்த்துவதும், சேர்ந்தோர் எவருக்கும் நேர்ந்து உதவுவதும், 'தானே தனக்குத் துணைவன்' என்ற கொள்கையை வற்புறுத்துவதும், சேவகம் என்கின்ற பெயரையே போக்கவல்லதும், தன்மதிப்பையும் சுதந்தரத்தையும் வளர்க்கத் தகுந்ததும் ஆகிய கூட்டுறவு முறை பிறக்கலாயிற்றென்க.

எங்ஙனம் ஸ்ரீமத் இராமாயணம் முதலிய புண்ணிய சரிதங்களைப் படிப்போர்களும் கேட்போர்களும் நற்பயன்

பெற்று இனிது வாழ்வார்கள் என்ற நம்பிக்கையுளதோ, அங்ஙனமே இக்கதையைப் படிப்போர்களும் கேட்போர்களும் நற்பயன் பெற்று இனிது வாழ்வார்களென்பது இம்முறையில் நம்பிக்கை வைத்தோர்களது கொள்கை.

நிற்க, இம்முறையை இந்த ராஸ்டேல் வழிகாட்டிகளே முதன்முதலிற் கண்டுபிடித்தார்க ளென்பதில்லை. எப்போதும் உலகத்தில் ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்வது இயல்பே. பார்மிங்காம் என்னும் பட்டணத்தில் (1777) கூட்டுத் தையற்கடை ஏற்பட்டது. மாங்க்வெல் என்னும் பட்டணத்தில் (1794) ஒரு பாதிரியார் கூட்டுமளிகையை ஸ்தாபித்தார். இங்ஙனம் வேறு பல ஸ்தாபனங்களுமுண்டு. எனினும், ஏன் நாம் இந்த ராஸ்டேல் வழிகாட்டிகளுக்கு இவ்வளவு பெருமையைத் தரல் வேண்டுமெனில், இவர்களாலேதான் உலக சமாதானத்திற்கும், சமத்துவம் நிலைபெறுதற்கும், வறுமை நீங்குதற்கும், நம்பிக்கை வளர்வதற்கும், ஒற்றுமை உறுதியுறுதற்கும் இன்றியமையாதனவாகிய பல உயரிய கொள்கைகளுடன் கூடிய விதிகள் கண்டுபிடிக்கப்பட்டன ; இவர்களே அவ்விதிகளை நன்கு ஆராய்ந்து கைக்கொண்டு பெரும்பயன் பெற்று இனிதுவாழ்ந்து இன்றும் உலகினர்க்கு வழிகாட்டிகளாக இருக்கின்றார்கள் ஆதலின் என்க. இனி, அந்த வழிகாட்டிகளது வரலாற்றைக் கூறவேண்டியது அவசியமாகின்றது.

இந்த ராஸ்டேல் என்னும் பட்டணம் இங்கிலாந்தில் மான்செஸ்டர் என்னும் பட்டணத்திற்கு அருகாமையில் இருக்கின்றது. இஃது அக்காலத்தில் (1843) கம்பளி நெசவுக்குப் பேர்போனது. இங்குள்ள கம்பளி நெசவுத் தொழிலாளர்கள் " எங்களுக்குக் கிடைக்கும் கூலி விகிதம்

மிகக் குறைவா யிருக்கின்றது ; உணவுக்கும் போதவில்லை ; ஆதலின் நீங்கள் சிறிது கூலியை உயர்த்தித் தரவேண்டும் ; இன்றேல் நாங்கள் வேலை செய்வதை நிறுத்திவிடுவோம் " என்று முதலாளிகளுக்கு அறிவிப்பதாக முடிவினைச் செய்து கொண்டார்கள். ஆனால், அந்த முடிவை முதலாளிகளுக்கு அறிவிக்க ஒருவரும் தைரியமாக முன்வரவில்லை. இறுதியில் அந்த முயற்சி பூனையின் கழுத்தில் மணியைக் கட்ட முயன்ற எலிகளின் கதைபோலாயிற்று.

இங்ஙனம் சிலநாட்கள் செல்ல, மீண்டும் அவர்கள் தங்களது கஷ்டத்தைத் தாங்கமாட்டாது இறுதியில் தங்களது முடிவை முதலாளிகளுக்குத் தெரிவித்தார்கள். முதலாளிகள் அவ்வேண்டுகோளுக் கிணங்கவில்லை. தொழிலாளர் பக்கம் பரிந்து பேசுவார் ஒருவருமிலர். பொதுஜனங்களது உணர்ச்சியும் தொழிலாளர்களுக்குத் துணைபுரிவதா யில்லை. என்ன செய்வார்கள் பாவம்! ஏழைத் தொழிலாளர்களது கட்சி தோல்வியுறுவதாயிற்று. அதனால் அவர்கள் பெரிதும் துன்பத்திற் குள்ளானார்கள். பல தொழிலாளருக்கு வேலையே இல்லாது போயிற்று. பலர் வேலைக்குச் சென்றும் சம்பளக் குறைவாலும், வேலை நிறுத்தக் காலத்தில் வரும்படி இல்லாதிருந்ததாலும் கஷ்டப்பட்டனர். எனினும், "இக்கஷ்டத்தினின்றும் எவ்விதம் விடுபடலாம்?" என்று அவர்கள் விடாது ஊக்கத்துடன் ஆலோசனை செய்துவந்தார்கள். இதன் பயனாக அப்பொழுதே தொழிலாளர்களுக்கும், முதலாளிகளுக்கும் பொருளாதாரப் போராட்டம் உண்டாயிருக்கும். ஆனால், அச்சமயம் இங்கிலாந்திற் புதுவதாகத் தொழிலாளர் சம்பந்தமாக ஒரு சீர்திருத்தச் சட்டம் அனுஷ்டானத்திற்கு வரப்போவதா யிருந்தமையின் 'பொருளாளர்களாலே

தங்களுடைய கஷ்டங்களுக்குப் பரிகாரம் செய்யப்படும்' என்று பல தொழிலாளர்கள் கருதி வாளாவிருந்தார்கள். என்ன செய்தும் பயன் உண்டாகவில்லை. தொழிலாளர்களது உழைப்பு முற்றிலும் விழலுக்கிறைத்த நீர்போலும், செவிடன் காதில் ஊதிய சங்குபோலும் முடிந்தது. எனினும், அவர்கள் சோர்ந்துவிடவில்லை.

"உடைய ரெனப்படுவது ஊக்கமஃ தில்லார்
உடையது உடையரோ மற்று"

என்றபடி அவர்கள் மேலும் மேலும் முயன்று கிளர்ச்சி செய்துவந்தார்கள்.

இங்ஙனம் அரசாங்கத்தாரிட மிருந்தும், பொது ஜனங்களிடமிருந்தும் உதவி கிடைக்காமற் போகவே தொழிலாளர்கள் வியாபாரம், விவசாயம் முதலியவற்றிலும் தொல்லைக்குள்ளானார்கள். அவை சிறிது குறைவுற்றாலும் தொழிலாளர்கள் பெரிதும் தாங்கொணுத் துன்பத்திற்குள்ளானார்கள். இக்காலத்தில் உணவின்றியே தொழிலாளரிற் பலர் மாண்டனராம்.

இப்படித் தொழிலாளர்கள் துன்புறுங்காலத்தில் அந்தப் பொல்லாத பொருளாளர்களும், முதலாளிகளும் விலையுயர்ந்த ஆபரணங்களை அணிந்துகொண்டும், குதிரை வண்டிகளிற் சவாரி செய்துகொண்டும், பட்டுப் படுக்கைகளிற் படுத்து உறங்கிக்கொண்டும் கவலையற்று மகிழ்வுற்றிருந்தார்கள்.

தொழிலாளர்களுடைய குழந்தைகள் உண்ணவும், உடுக்கவும், படுக்கவும், படிக்கவும் வழியின்றிச் சுரங்கங்களிலும், நிலங்களிலும் கஷ்டப்பட்டு வருந்த, அந்த முதலாளிகள் தங்களுடைய குழந்தைகளை நன்றாய்ப் படிக்க

வைத்து இனிது வளர்த்துவந்தார்கள். இவற்றைப் பார்க்க அந்த ஏழைத் தொழிலாளர்களுடைய மனம் என்ன பாடு படும்?

"நமது உழைப்பாலல்லவோ இந்த முதலாளிகளுக்கு இவ்வளவு வாழ்வும் வந்தது? இங்கிலையில், அவர்கள் நம்மைப்பற்றிச் சிறிதும் கவனஞ் செலுத்துகின்றார்களில்லையே. அன்றியும், அனைவரும் கடவுளுடைய குழந்தைகளல்லவா? கடவுள் முன்னிலையில் உலகத்துதித்த மாந்தர் அனைவரும் சமமன்றோ? நிலம், நீர், காற்று, ஒளி முதலியன அனைவருக்கும் உரியனவல்லவா? முற்கூறியவற்றிலிருந்து நம்மவர்களது உழைப்பால், 'உழைக்கின்றவர்களாகிய நாம் பெரிதும் துன்புறுவதும் உழைக்காத ஒரு கூட்டத்தார் பெரிதும் இன்புறுவதும் எங்ஙனம் நியாயமாகும்?' மேலும், நாம் அவர்களிடம் தானமாக ஒன்றையும் கேட்கவில்லை. நியாயத்தைச் சரியாக வழங்கவேண்டுமென்றே கேட்கின்றோம். ஏழை பங்காளரும், சீமானுமாகிய நமது ஓவன் துரைமகனார் போன்ற தூய்மையாளர்களது கொள்கையும் நமது கட்சி நியாயமானதென்பதே. ஆதலின், அப்பொருளாளர்கள் தாங்கள் மாத்திரம் சுகமாகவும், சுதந்தரர்களாகவும் வாழ்ந்து நம்மை மாத்திரம் விலங்குகள்போல நடத்துவதற்கு நாம் இனிச் சிறிதும் இடங்கொடுத்தல் கூடாது. இதைப் போக்கப் பெரிதும் முயன்றுவரல்வேண்டும்" என்று அந்த ஏழைத் தொழிலாளர்கள் நினைப்பதை எவர் குறைகூறுவது? ஒருவருக்கும் குறைகூற இடமில்லை என்பது வெள்ளிடைமலை.

எனினும், அந்த ஏழைத் தொழிலாளர்கள் இவ்வளவு கஷ்டப்பட்டும், நல்ல உணர்ச்சியும கிளர்ச்சி செய்யும் வழியும் தெரிந்தும் பலாத்காரத்திற்குத் தங்களை உள்ளாக்கிக் கொள்ளவில்லை. முரட்டுச் செயல்களையே வெறுத்தார்கள்.

ஆனாலும், அவர்கள் தங்களது விடுதலைக்கு நியாயமும், அமைதியுமான வழியையே நாடி வந்தார்கள். கத்தி, துப்பாக்கி முதலிய ஆயுதங்களால் அடக்கவல்ல அரசாங்கத்தையும், அவர்களது உதவியைப் பெரிதும் பெற்றுள்ள முதலாளிகளையும் எதிர்த்துப் போராடிப் பொருளாதாரப் போராட்டத்தில் வெற்றி பெறுவதற்கு அந்த ஏழைத் தொழிலாளர்கள் செய்யத் தொடங்கியதைக் கேட்டாலே சிரிப்பாக இருக்கும். இந்நிலையில், தொழிலாளர்களுக்கு வெற்றி என்பது பகற் கனவே என்று படிப்போர் கருதக்கூடும். ஆனால், அவர்கள் 'இம்முறையினாலேதான் தங்களுக்கு வெற்றி கிடைக்கும்' என்று பகிரங்கமாக வெளியிட்டார்கள்; கைக்கொண்டு பெரிதும் இன்புற்று வாழ்ந்து வருகின்றார்கள். அதுதான் சர்வ வல்லமையுள்ள கூட்டுறவுப் பண்டகசாலை. இனி அந்தத் தொழிலாளர்கள் எப்படி அந்தக் கூட்டுறவுப் பண்டகசாலையை நிலைபெறுவித்தார்கள் என்பதைப்பற்றி எழுதுவாம்.

இப்படியாக, ஒருகால் (1843) ஒரு ஞாயிற்றுக்கிழமை மாலையில் தொழிலாளரிற் பலர் ஒரு மதுவிலக்குச் சங்கத்திற் கூடினர். அப்பொழுது முன்னர்ப் பலவிதமாகத் தங்களை உயர்த்திக்கொள்ள வழி தேடிவரும் தொழிலாளர் கூட்டத்தாருள் ஒருவர், அங்குள்ளவர்களைப் பார்த்து, "சகோதரத் தொழிலாளர்களே, நாமோ சோம்பேறிகளாக இருக்கவில்லை; பெரிதும் வருந்திப் பாடுபட்டு உழைக்கின்றோம். அங்ஙனமிருந்தும் வறுமைநோயாற் பெரிதும் துன்புற்று வருந்துகின்றோம். நம்முடைய பெண்டு பிள்ளைகளோ அளவில்லாத் துன்பத்திற் காளாகி நலிகின்றார்கள். 'இங்ஙனம் வருந்திப் பாடுபட்டு உழைத்தும் உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாதனவாகிய உண்டி, உடை, உறையுள் என்ற மூன்றற்குமே பெரிதும் துன்புறவேண்டியிருக்கிறதே' என்று

கருதி ஏழைகளின் விடுதிக்குச் செல்லுவோம் என்றாலோ அதற்கு மானம் இடையில் நின்று தடுக்கின்றது. மானம் உயிரினும் சிறந்ததல்லவா? அன்றியும், அது சோம்பேறிகளது செய்கையாகவும் முடியும். பிற நாடுகளுக்குச் செல்லுவோம் என்றாலோ அது வறுமையாளனாகப் பிறந்த குற்றத்திற்காக ஒருவன் தன்னைத்தானே தீவாந்தர சிட்சைக்கு உள்ளாக்கிக் கொள்வதாக முடிகின்றது. மேலும், 'அங்கும் இத்தகைத் தொல்லை நம்மைத் தொடராது' என்று எங்ஙனம் நாம் நம்பமுடியும்? 'ஐங்காதம் போனாலும் தன் சாயல் தன்னோடே' என்பது பழமொழியாயிற்றே! இரந்து பிழைப்போம் என்றாலோ அது,

"பல்லெலாம் தெரியக்காட்டிப் பருவால் முகத்திற்கூட்டிச்
சொல்லெலாம் சொல்லிநாட்டித் துணைக்கரம் விரித்துநீட்டி
மல்லெலாம் அகலஓட்டி மானம்என் பதனைவீட்டி
இல்லெலாம் இரத்தல்அந்தோ இழிவுஇழிவு எந்நாளும்"

என்றபடி பெரிதும் இழிதொழிலாகக் காணப்படுகின்றது. உடலில் வன்மையிருந்தும் பிறரது தேட்டத்தில் உயிர் வாழப் பார்ப்பது வெட்கமானதல்லவா? கடனை வாங்கி வயிற்றை வளர்க்கலாம் என்றாலோ அது தன்னைத்தானே பிறர்க்கு அடிமையாக்கிக்கொள்வதாக முடிகின்றது. கடன் கொடுப்பாரும் இல்லை. அன்றியும், கடன்பட்டோர்கள்

"விடன்கொண்ட மீனைப்போலும் வெந்தணல் மெழுகுபோலும்
படன்கொண்ட பாந்தள்வாயிற் பற்றிய தேரைபோலும்
திடன்கொண்ட ராமபாணம் செருக்களத் துற்றபோது
கடன்கொண்டார்நெஞ்சம்போலும்கலங்கினான் இலங்கைவேந்தன்"

என்றபடி பெரிதும் மனக்கலக்கமுற வேண்டியவர்களாகின்றார்கள். கடன் முழுவதும் கொடுபடும் வரையில் அவர்களுக்குப் பெருங்கவலையே. திருடிப் பிழைக்கலாம் என்றாலோ

"உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வேம் எனல்"

என்ற பொய்யாமொழி அதனை நினைக்கவும் கூடாத தொழிலாக எண்ணுகின்றது. வேலை செய்வதை நிறுத்திவிடலாம் என்றாலோ 'வறுமை காரணமாக அது கடைசியிலே முரட்டுச் செயல்களுக்கும், தீச்செயல்களுக்கும் நம்மை உள்ளாக்கி விடுமோ' என்ற ஐயத்தை உண்டுபண்ணுவதாக இருப்பதுடன், நிறைவேற்ற முடியாததாகவும் இருக்கின்றது. ஆதலின், சகோதரர்களே, இந்தப் புண்ணிய நாளில் நம்மவர்களது துன்பநீக்கத்திற்கும், விடுதலைக்கும் உற்ற வழியைப்பற்றி அளவளாவி ஏதேனும் நல்லதொரு முடிவுக்கு வருவது பெரிதும் விரும்பத்தக்கதாகும்" என்று கூறி அமர்ந்தார்.

உடனே, அங்கிருந்த ஒரு மதுவிலக்குப் பிரசாரகர் எழுந்து, "சகோதரர்களே, நம்மவர் இத்துணைத் தாழ்ந்த நிலைமையை அடைந்ததற்குக் காரணம் அவர்களுக்குப் பொருள்வருவாய் குறைந்திருப்பதன்று; அவர்களுடைய ஒழுக்கம், உணர்ச்சி, பொருள் ஆகியவற்றை அழிக்கவல்ல குடிப்பழக்கமே காரணமாவது. அக் குடிப்பழக்கமே நம்மவர்களை இத்தகைய இழிந்த நிலைமைக்குக் கொண்டு வந்திருக்கின்றது என்பதைப்பற்றி நான் அதிகம் விரித்துக் கூறவேண்டியதில்லை. ஒவ்வொருவரும் குடித்துப் பின்னர் வீட்டுச் செலவுக்கு வழியின்றித் துன்புறுங்கால் தாம் தாம் செய்த தகாத செயலுக்கு இரங்குவதை நாம் பன்முறையும் பார்த்திருக்கின்றோம். குடியர் அறிவுடையோரால் நன்குமதிக்கப் படார்; பெற்ற தாயாலும் வெறுக்கப்படுவார்; அறிவிழந்து மயங்குவார்; அனைவராலும் சிரிக்கப்படுவார். அதிகம் சொல்லுவானேன். அக் குடிப்பழக்கத்தைத் 'திருநீக்கப்பட்டார் தொடர்பு' என்று

அறநூல முறையிடுகின்றது. ஆதலின், நம்மவர் தாங்கள் தேடும் பொருள்களைப் பானவகைகளுக்குச் செலவு செய்யாது அப்படியே வீட்டுக்குக் கொண்டுபோவார்களாயின் அவர்களுக்கு எவ்விதத் துன்பமும் வரக் காரணமில்லை. இதுவே நம்மவர்களது விடுதலைக்குற்ற வழியுமாகும்'' எனக் கூறி முடித்தார்.

அப்பால், அரசியற்பிரசாரகர் ஒருவர் எழுந்து, ''சகோதரர்களே, நாமும் இறைவனாற் படைக்கப்பட்டவர்களுட் சேர்ந்தவரே யாவோம். அங்ஙனமிருக்க, கடவுளின் படைப்புக்களாகிய இயற்கைச் சுதந்தரங்களும், சுகானுபவங்களும் நம்மனோருக்கு மாத்திரம் இல்லாது போகக் காரணம் என்னை? யாது காரணம்பற்றியோ ஏழையர்களாகப் பிறந்ததற்காக நாம் நம்போன்ற மனிதர்களாற் பெரிதும் இழிவாக நடத்தப்படுவதற்கும், அதற்கும் நம்மவர் உட்பட்டே தீரவேண்டியதற்கும் துணைபுரிவது அரசாங்கமே. அந்த அரசாங்கம் நம்மை வருத்தும் முதலாளிகளுக்குத் துணை புரியாதாயின் நாம இன்புற்று வாழலாமல்லவா? இதனால் அரசாங்கம் நமது கையில் இருக்கவேண்டுமென்பது பெறப்படுகிறது. ஆகவே, நாம் அனைவரும் ஒரு மனதுடன் முயன்று நமது பிறப்புரிமையாகிய வாக்குக்கொடுக்கும் அரசியற் சுதந்தரத்தைப் பெறல்வேண்டும். அக்கால், அரசாங்க நிர்வாகர்களாக இருப்பவர்கள் நாம் கொடுத்த வாக்குரிமையால் வந்தவர்களாதலின், மறு தேர்தலில் நமது வாக்குபலத்தைப் பெறவேண்டியேனும் நமது கட்சியை விட்டுக்கொடுக்கத் துணியமாட்டார்கள். அதனால், அரசாங்கம் நமக்குத் துணைபுரிந்தே ஆகவேண்டிய நிலைமை வரும். எப்பொழுது அரசாங்கம் நமது பக்கம் வந்ததோ அப்பொழுதே நமது கலியுந் தீர்ந்துவிடும்! இதுவே எனது கருத்து'' எனப் பேசி முடித்தனர்.

பின்னர், கம்பளி நெசவுத் தொழிலாளரில் ஒருவர் எழுந்து, "சகோதரர்களே, இந்த நல்லநாளில் நம்மவர்களது துன்பத்தைத் துடைக்குந் துறைபற்றிப் பேசநேர்ந்ததை ஏனையோரைப் போலவே நானும் பெரும் பேறாக எண்ணு கின்றேன். எனக்கு முன்னர்ப் பேசிய இருவருள் முன்ன வர் மதுவிலக்கால் நம்மவர்களது வறுமைத் துன்பம் நீங்கு மென்றும், பின்னவர் சுயஆட்சி கிடைத்தால் நீங்குமென்றும் விரித்துரைக்கு முறைமையில் தத்தம் கருத்துக்களை வெளி யிட்டனர். முன்னர்ப் பேசப்பட்ட மதுவிலக்கு மேலானது தான். ஆனால் உலகத்திற் பழக்கம் என்பது ஒன்றுண்டு. அது நல்லதற்கும் கெட்டதற்கும் சரிதான். எனினும், கெட்ட பழக்கம் விரைவிற் கைக்கொள்ளப்பட்டு இலகுவில் நீக்கமுடியாதது. நம்மவர்களது கெட்டபழக்கமாகிய குடிப் பழக்கமோ தொன்றுதொட்டு வருவது. 'தொட்டிற்பழக்கம் சுடுகாடு மட்டில்' என்பது பழமொழி. இங்கிலையிற் குடிப் பழக்கத்தை நிறுத்திவிட வேண்டுமென்றால் அது இலகுவில் நிறைவேறுமா? இதனால் நான் குடிப்பழக்கத்தை ஆதரிக் கின்றேன் என்று கொள்ளலாகாது. நான் குடிப்பதில்லை. சிறிது சிறிதாக அதனைப் போக்கிக்கொள்ள வேண்டியது மேலானதே.

இரண்டாமவர் உற்சாகமூட்டிப் பேசியபடி நமக்குச் சுய ஆட்சி கிடைத்துவிடின் நன்மை உண்டாகலாம் என் பது ஒருவகையிற் பொருத்தமானதே. சுயஆட்சி கிடைப்ப தென்றாலோ இலகுவில் ஆகக்கூடியதாயில்லை. நமக்கு வயிறு நிறையச் சோறு போடவும் மனம் வராதவர்களும், படிப் பாலும் பொருளாலும் வன்மை வாய்ந்தவர்களும் ஆகிய முதலாளிகளா நம்மவர்களுக்கு எளிதிற் சுய ஆட்சி கிடைக் கப் பார்ப்பார்கள்! அவர்கள் எத்தனையோ முறை நம்மவர்க

ளது முன்னேற்றத்திற்குத் தடை செய்துள்ளார்கள்; தடை செய்கின்றார்கள்; இனியும் செய்தே தீருவார்கள். நம்மவர்களுக்குள் அறிவு பரவி, கொடுஞ் செயல்கள் குறைந்து, ஒற்றுமை வலிவுற்று 'இவர்கள் விரும்புவதைக் கொடாவிடில் வலிந்து பிடுங்கிக்கொள்வார்கள்' என்று நினைக்குமாறு நாம் நம்மை அவர்கள் முன் உயர்த்திக் கொண்டாலன்றி நமது விடுதலைக்குத் துணைபுரியக்கூடிய சுய ஆட்சி கிடைப்பது பகற்கனவாகும். அன்றியும், சுய ஆட்சி கிடைக்கும் வரையில் நம்மவர் உயிரோடிருக்க வேண்டாவோ? உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாதன வற்றை முதலிலே தேடிக்கொண்டல்லவோ பின்னர்ச் சுய ஆட்சிக்கு அடிகோலவேண்டும்? சுவரை வைத்துக் கொண்டல்லவோ சித்திரம் வரைதல் வேண்டும்? இதனால் நான் சுய ஆட்சி பெற முயல்வதைக் குறைகூறுபவனாக மாட்டேன்.

"ஞாலம் கருதினுங் கைகூடும் காலம்
கருதி இடத்தாற் செயின்"

என்றபடி எந்த முயற்சி செய்வதற்கும் காலம் வேண்டும். நாமோ இப்பொழுது மிக வறுமையுற்ற நிலைமையிலிருக்கின்றோம். நமது தற்காலப் போராட்டமோ பொருளாதாரப் போராட்டமாகும். சுய ஆட்சியோ ஜீவாதாரப் போராட்டமாகும். உலகத்திற் பொருளை இன்றி எந்தக் காரியமும் இனிது நிறைவேற முடியாது. பொருளற்றவரையும் பொருளாகச் செய்யவல்லது பொருள்.

"செய்க பொருளை செறுநர் செருக்கறுக்கும்
எஃகுஅதனிற் கூறிய தில்"

என்பது எவ்வளவு ஆழ்ந்த கருத்தை விளக்குகின்றது பாருங்கள். அவ்வளவு வன்மை வாய்ந்த பொருளை

எங்ஙனம் தேடலாம் எனிலோ கூறுவேன். நாமோ நாளும் பலபல பாடுகளைப் பட்டுக் கேடுகட்டாளாய் உழைத்து உழல்கின்றோம். அவ்வுழைப்புக்கேற்ற கூலி பெறுவிடினும் ஏதோ சிறிதளவேனும் பெறுகின்றோம். பெற்றும், அவற்றை நாம் அப்படியே உண்பதில்லை; உண்ணவும் முடியாது. ஆனால் நாம் அவற்றை ஒரு வியாபாரியிடம் கொடுத்து நமது வீட்டிற்கு வேண்டிய அளவு உணவு, உடை ஆகிய இவற்றைப் பெறுகின்றோம். தமது இலாபத்தின் பொருட்டு வாங்கிவிற்கும் அக் கடைக்காரருக்குத் தாம் வாங்கின விலைப்படிக்கே நமக்குக் கொடுக்கவேண்டிய அவசியம் உண்டா? அங்ஙனம் கொடுக்கத்தான் முடியுமா? கொடுப்பாரா? அவசியமுமில்லை, முடியவும் முடியாது; கொடுக்கவுமாட்டார். ஆகவே, அவர் ஏதோ ஒரு பகுதியைச் சேர்த்தே நம்மிடமிருந்து வாங்குவார். இது விஷயமாய்ப் பல வினாக்கள் நிகழலாம். அவை யனைத்திற்கும் விடை கூறுவது ஊன்றி ஆராய்வார்க்கு எளிதாகும். ஆதலின், முன் கூறப்பட்ட மதுவிலக்கு, சுய ஆட்சி என்ற இரண்டு துறைகளிலும் முயன்று வருவதுடன், நமமவர்க்கு வேண்டிய உணவுப்பொருள் முதலியவற்றை நமக்கு விற்கும் அந்த வியாபாரிகள் வாங்குவது போல மொத்தமாக ஒன்றுசேர்ந்து வாங்கிச் சில்லறையாகப் பிரித்து எடுத்துக்கொண்டு ஏன் நாமே அக் கடைக்காரர்கள் அடையும் லாபத்தை அடையலாகாது? அற்பம் அற்பமன்றே. சிறு துரும்பும் பற்குத்த உதவுமல்லவா? பொருளாதார சாஸ்திரமோ, பொருளை அடைய விரும்புவோர் அதனை இழந்த அல்லது வைத்து மறந்த வழியிலேயே தேடி அடையவேண்டும் என்கின்றது. நமது தேட்டம் எந்த வழியில் அழிவுறுகின்றது என்பது நம்மவர் அனைவருக்கும் தெரிந்ததே.

'மனைக்குள்வைத்த பண்டங்களை மறந்தவன் வருடனுற றழுதாலும்
நினைத்து உணர்ந்தபின் கிட்டும்'

என்பது அறிவுநூற் கருத்து. அன்றியும், இம் முறையால் எவர்க்கும் எத்துணையும் தீமை இல்லை என்பதும் கவனிக்கத் தக்கது. இங்ஙனம் செய்வது நமது கடமையாகும். மேலும், இங்ஙனம் நாம் ஒன்று சேர்ந்து தொழிலைச் செய்து நமது பசியைத் தணித்துக்கொள்வோமாயின், அக்கால், நாம் இப்பொழுது சோற்றுக்குப் பாடுபடும் வேலை சிறிது குறைவுறும். குறையவே, அந்த ஓழிவுக் காலத்திற் சுய ஆட்சி பெறவும் பாடுபடலாம். நிற்க, அது சுய ஆட்சி கிடைக்கும் வரையிலும், மதுவிலக்கு முழுப்பயனை அளிக்கும் வரையிலும் நம்மவர்களைத் துன்பத்தினின்றும் நீக்கத் துணை புரிவதாயிருப்பதும் ஆராயத்தக்கது. இதுபற்றிக் கூற வேண்டியனவாக என் மனத்தே பல இருப்பினும், காலமின்மையின் இம்மட்டோடு நிறுத்துகின்றேன். சகோதரர்கள் அனைவரும் எனது வேண்டுகோளைப் பூர்த்தி செய்ய முயலுமாறு மீண்டு மொருமுறை வணக்கத்துடன் அன்னரை வேண்டிக்கொள்ளுகிறேன். 'தன் கையே தனக்குதவி' என்பது பழமொழி" எனக் கூறி அமர்ந்தார்.

இஃது எல்லோராலும் ஒரு மனதாய் ஒத்துக்கொள்ளப்பட்டது. எனினும், சிலருக்கு நம்பிக்கை பிறக்கவில்லை. ஆனாலும், அங்கே கூடியிருந்த கம்பளி நெசவுத் தொழிலாளர்களில் இருபத்தெட்டுப் பேர்கள் இத் துறையில் முயலப் பெரிதும் ஊக்கங்கொண்டிருந்தார்கள். இங்ஙனம் பேசிய அவர்கள் பேச்சளவில் நின்றுவிடவில்லை. தாங்கள் குறித்த தொழிலைத் தொடங்குவதற்காகச் சில நாட்களுக்கெல்லாம் அவர்களால் அங்கத்தினர்களைச் சேர்க்கவும் மூலதனத்தை அமைக்கவும் ஒரு கையொப்பச் சீட்டு

வெளியிடப்பட்டது. அஃது அங்கே சுற்றுப்பக்கங்களி லுள்ள தொழிலாளர்களுக்கெல்லாம் அனுப்பப்பட்டது. கையொப்பத் தொகையோ ஒவ்வொருவருக்கும் இரண்டு பென்ஸ் ஆகும். கையொப்பத் தொகையை வசூல் செய்ய மூன்று கௌரவ உத்தியோகஸ்தர்கள் நியமிக்கப்பட்டார் கள். ராஸ்டேல் குபேரர்களுக்கு இந்த இரண்டு பென்ஸைக் கொடுப்பதும் அப்பொழுது பெரிய துன் பத்தை விளைவிப்பதாயிருந்தது. கையொப்பத் தொகையை வசூல் செய்ய அந்தக் கௌரவ உத்தியோகஸ்தர்கள் ஒவ்வொருவரிடத்திலும் பலமுறைகள் செல்லவேண்டிய தாயிற்று. இவ்வளவு கஷ்டப்பட்டாலும் அவர்கள் 'தங்களது முயற்சி ஏழைகளுக்கு நன்மையினைச் செய்யக் கூடியது' என்பதில் நம்பிக்கை வைத்தவர்களாதலினாலே தங்களது தொழிலை ஒரு மதக்கடமைபோலப் பாவித்து ஊக்கத்தோடு முயன்று வந்தார்கள்; இருபத்தெட்டுப் பவுனை வசூல் செய்தார்கள். இவர்கள். இப்படிக் கஷ்டப் பட்டு வசூல் செய்த இருபத்தெட்டுப் பவுனாகிய அந்தச் சிறிய தொகைதான் ஒருகாலத்தில் உலகத்தையே புதுவ தாக மாற்றும் முதற் கருவியாகிய "கூட்டுறவுப் பண்டக சாலை" யின் உற்பத்திக்கு மூலதனமாகியது.

அப்பால் (24—10—1842) அடியிற் குறிக்கப்படும் நோக்கங்களுடன் "ராஸ்டேல் நியாய வழி காட்டுபவர் களின் சங்கம்" என்ற பெயரினைக்கொண்ட ஒரு ஸ்தா பனம் பதிவு செய்யப்பட்டது. அந்த நோக்கங்கள் வருமாறு:—

1. அங்கத்தினர்களுக்கு வேண்டிய உணவுப் பொருள், உடை முதலியவற்றை மொத்தமாக வாங்கிச் சில்லறையாகப் பிரித்துக்கொள்வதற்கு ஒரு கூட்டுறவுப் பண்டகசாலையை ஸ்தாபித்தல்.

2. ஒருவருக்கொருவர் உதவி செய்துகொண்டு தங்கள் தங்களது நிலைமையை உயர்த்திக்கொள்ள விரும்புகிற அங்கத்தினர்களுக்குப் புதிதாக வீடுகளைக் கட்டியோ அல்லது வாங்கியோ கொடுத்தல்.

3. வேலை கிடைக்காமல் வருந்திக்கொண்டிருக்கும் தொழிலாளர்களுக்கும், வேலை கிடைத்து வரும் படிக் குறைவால் கஷ்டப்படுகின்ற தொழிலாளர்களுக்கும் போதிய அளவு வேலை கிடைக்கவும், வரும்படி கிடைக்கவும் துணையாகப் பல தொழிற்சாலைகளை அமைத்தல்.

4. விலைக்கோ அல்லது குத்தகைக்கோ நிலங்களை வாங்கி வேலை கிடைக்காத அங்கத்தினர்களுக்கு வேலை கிடைக்குமாறு செய்தல்.

5. அங்கத்தினர்களுக்கு வேண்டிய பொருள்களை உண்டாக்கல், பிரித்துக்கொடுத்தல், ஆளுதல் என்ற இவற்றிற்குத் துணையாகும் பொருட்டுக் குடியேற்ற நாடுகளை அமைத்தல்.

6. தங்களையொத்தகொள்கையினையுடைய சங்கத்தார்க்கு உதவிபுரிதல்.

கவனியுங்கள்! 'இருபத்தெட்டுத் தரித்திரர்கள் சேர்ந்தா இத்தகைப் பெரு மாறுதலை உண்டாக்கக்கூடிய காரியத்தைச் செய்வது?' என்று சிலர் நினைக்கக்கூடும். அது சரியே. ஆயினும், அவர்கள் தங்களது உறுதியான உழைப்பினால் இருபத்தைந்து வருடங்களுக்குள் தங்களது நோக்கத்திற் சரி பாதியைப் பூர்த்தி செய்துகொண்ட முறைமையில் பெரிய வெற்றியைப் பெற்றுவிட்டார்கள். இன்னும் மேற் போய்க் கொண்டிருக்கிறார்கள். இனி, ராஸ்டேல் 'நியாயவழி காட்டுபவர்களின் சங்கம்' கொண்டிருந்த

கோட்பாடுகளை அறிந்துகொள்வது பொருத்தமானது. அவை வருமாறு:—

1. தங்களது சொந்த முதலைக் கொண்டே தொழிலை நடத்தல்.

2. இயன்றவரையில் நல்ல சாமான்களையே வாங்குதல்.

3. சரியான அளவு, நிறைகளுடன் பிரித்துக் கொடுத்தல்.

4. கொள் முதலுக்குக் குறைத்தாவது, அயல் வியாபாரிகளுடன் போட்டி போட்டாவது பிரித்துக்கொடுப்பதை நிறுத்திக் கடை விலைக்கே பிரித்துக்கொடுத்தல்.

5. அங்கத்தினர்களைக் கடன்காரர்கள் ஆக்காதிருப்பதற்காக 'எக்காரணம் பற்றியும் கடன் கொடுப்பதும், கடன் வாங்குவதும் கூடாதன' என்ற கொள்கையுடன் இருத்தல்.

6. 'எவரால் பொருள் மிகுந்ததோ அவரே அதனைத் திரும்ப அடையவேண்டியது' என்ற நியாயத்தை நிலைநிறுத்தச் சாமான் வாங்கிய வீதப் படி மிகுதிப் பொருளை வாங்கியவர்க்குப் பிரித்துக்கொடுத்தல்.

7. சங்கத்தாற் கிடைத்த மிகுதிப் பொருளைச் சங்கத்திலேயே சேமித்து வைத்தல்.

8. சாமான் வாங்கியவர்களுக்கும், வேலைசெய்கின்றவர்களுக்கும் பொருள் மிகுவதற்கு உதவியா யிருக்கும்படி சேமித்துள்ள முதலுக்கு நூற்றுக்கு ஐந்துக்கு மேற்படாத குறைந்த வட்டியைக் கொடுத்துவரல்.

9. தொழிற்சாலைகளிலுள்ள வேலையாளர்களுக்கு அங்கே கிடைக்கும் மிகுதிப் பொருளை அவர்கள் பெறும் சம்பள விகிதப்படி பிரித்துக் கொடுத்தல்.

10. அங்கத்தினர்களின் அறிவை வளர்ப்பதற்காக மிகுதிப் பொருளில் நூற்றுக்கு இரண்டரைப் பங்கைக் கல்விக்காகச் செலவு செய்தல்.

11. ஒவ்வொரு அங்கத்தினரும் ஒவ்வொரு 'வாக்கு' உரிமையைப் பெற்றிருக்கும்படி செய்தல்.

12. குற்றச் செயல்களும், போட்டிகளும் ஒழிவதற்காகக் குடியேற்ற நாடுகளை அமைத்து அங்கும் இந்த முறையை நிலைநிறுத்தல்.

13. மொத்த வியாபாரக் கூட்டுறவுப் பண்டகசாலைகளை அமைத்துத் தங்களது இரண்டாவது கோட்பாட்டை நிறைவேற்றல்.

14. இந்த ஸ்தாபனம் 'அங்கத்தினர்களது நன்னடக்கையையும், சுகவாழ்வையும் வளரச் செய்யும்' என்ற நம்பிக்கையுடன் அதனை நடத்திவரல்.

இக் கூட்டத்தாருக்கு 'நியாய வழிகாட்டுபவர்கள்' என்ற பெயர் பொருத்தமானது என்பது அவர்களது ஆறுவது கோட்பாட்டால் வலியுறும். இதனைத் தெரிவித்தவுடன் அங்கத்தினர் ஒவ்வொருவரும் 'கண்டேன் சீதையை' என்ற காலத்து ஸ்ரீ ராமபிரான் அடைந்த மகிழ்ச்சிபோலும் மகிழ்ச்சியை அடைந்தனர். நிற்க, இவர்கள் கடன் விஷயத்திற் பெரிதும் கவனமுள்ளவர்களாயிருந்தார்கள். 'கடன் கொடுத்த ஷைலக் என்பவன் வெனிஸ் வர்த்தகனுடைய இருதயச்சதையைக் கேட்டதைக் காட்டிலும், உணவுப் பொருள்களைக் கடன் கொடுத்த வியாபாரிகள் தங்களிடம் கடன் பட்டவர்களது குடலைக் கேட்பது நியாயமானது என்பது இவர்களது கருத்து. குடிப்பதால் உண்டாகும் தீமையைவிடக் கடன் படுவதால் உண்டாகும் தீமை குறைந்ததாகாது. ஆனால், ஏழை ஜனங்கள் இதை ஒரு பொருட்டாக எண்ணுகிறார்களில்லை. முதலாளி

களோ தங்களிடம் வேலை செய்யும் தொழிலாளர்களைக் கடன் படாதவர்களாகச் செய்யப் பாடு படுவதில்லை. ஆனால், கடன் பட்டு வேறு கதியற்றவர்களாகிவிட்டால் அவர்களுக்குத் தங்களது லாபத்தைக் கருதிச் சிறிது தருமமாக உதவி செய்கிறார்கள். இது, நோய் அதிகமானதற்குப் பிறகு மருந்து கொடுப்பதுபோலாகிறது. நோய் வராமலே தடுப்பது மேலானதா ? வந்த பிறகு, அதிலும் வைத்தியர் கைவிட்ட பிறகு, மருந்து கொடுத்துத் தடுக்கப் பார்ப்பது மேலானதா? இக் கடனாகிய பேய் ஒருவனைப் பற்றிவிடுமாயின், அஃது அவனைப் பெரிதும் துன்புறுத்தும். கடன் படுதல் அடிமைத் தனத்திற்கு ஒப்பாகும். ஆதலின், இக் கடன் தொல்லையிலிருந்து அங்கத்தினர்களைக் காத்தல் வேண்டும்' என்பது கருதி இக் கூட்டத்தார் கடன் கொடுத்தும், வாங்கியும் வரும் வழக்கத்தை முற்றும் நீக்கியுள்ளார்.

இத்தகைக் கோட்பாட்டினையுடைய இருபத்தெட்டு அங்கத்தினர்கள் சேர்ந்து தங்களது தொழிலைத் தொடங்க முன் வந்தார்கள் ; இருபத்தெட்டுப் பவுனை மூலதனமாகக் கொண்டு முதன் முதல் ராஸ்டேல் என்னும் பட்டணத்தில் வருஷத்திற்குப் பத்துப் பவுன் வாடகை கொடுப்பதாக அரிதின்முயன்றுஓரிடத்தைஅமர்த்திக்கொண்டார்கள்;ஒருநாள் (21—12—1844) பதினொன்கு பவுனுக்கு வாங்கிய சாமான்களுடன் தங்களது பண்டகசாலையைத் தொடங்குவதாக முடிவு செய்தார்கள். இவர்களது ஏழைமை நிலையைக் கண்ட புகைவிளக்குக் கடைக்காரர் 'இவர்களாற் கூலி கொடுக்கவும் முடியாது' என்று கருதி விளக்குக் கொடுக்கக்கூட மறுத்து விட்டனர். அங்கத்தினர்களே தாராளமாய்த் திறப்புக் கொண்டாட்டத்திற்கு வரத் தங்களது ஏழைமை நிலையைக் கண்டுவெட்கப்பட்டார்கள். பெரியவியாபாரிகள்இவர்களது

தொழிலைப் பழிப்பதற்காகக் கூடியிருந்தார்கள். பண்டக சாலையைத் திறப்பதற்கு ஒருவரும் துணிந்து முன்வரவில்லை.

இந்நிலையில், அக் கம்பனி நெசவுத்தொழிலாளர்களில் தைரியமுள்ள ஒரு வாலிபர் முன் வந்து, "சகோதரர்களே, நாம் நியாயமாகத் தொடங்கும் இக்காரியத்தை நிறைவேற்றி வைப்பதில் எனக்குச் சிறிதும் வெட்கமில்லை. நாம் தொடங்கியிருக்கும் தொழிலோ மனிதர்களுக்குள் இயற்கையான சகோதரப்பான்மையை வளர்ப்பது ; எவரையும் வேண்டிக் கொள்வதேயன்றிக் கட்டாயப்படுத்துவதன்று ; சாந்தமாகவே தொழிலை நடத்திவருவது; பல ஏழைகளும் ஒன்று சேர்ந்து பொருளாளர்களாலே தங்களுக்கு வரும் கஷ்டத்தைத் தடுத்துக்கொள்ள முயல்வது; பிறரைத் துன்புறுத்தும் பலசாலிகள் கூட்டம்போலாகாமல் தங்களைத் தாங்களே காத்துக்கொள்ளப் பல ஏழைகள் ஒன்று சேர்ந்து தொழில் செய்வது; ஒருவருடைய அல்லது ஒரு கூட்டத்தாருடைய லாபத்தை மாத்திரம் கருதாமல் சேர்ந்த எல்லார்க்கும் மிகுதிப் பொருளைச் சமமாகக் கொடுக்கவல்லது. அதிகம் சொல்லுவானேன் ; 'எல்லார்க்கும் ஒருவர் ; ஒருவர்க்கு எல்லாரும்' என்ற உயர்ந்த மகாமந்திரத்தை உலகினருக்கு உபதேசிப்பது. இத்தகைய உலக விடுதலைக்காதாரமான இந்த ஸ்தாபனத்தை முதன் முதலாகத் திறந்துவைக்கும் பாக்கியத்தை எனக்கு ஆண்டவனளித்தார். அதுபற்றி யான் பெருமகிழ் வெய்துகின்றேன். இந்த ஸ்தாபனம் யான் முற் கூறியபடி பல நன்மைகளையும் அளித்து மேன்மேலோங்கி என்றும் நின்று நிலைபெறுவதாக" எனக் கூறி அதனைத் திறந்துவைத்தார். உடனே அந்த ஏழைத் தொழிலாளர்களின் சிறுவர்கள், "இந்த ஸ்தாபனம் இனிது தழைத்தோங்கி வாழ்வதாக" என வாழ்த்துக் கூறினார்கள்.

இவ்வளவு இடையூறுகளுக்கிடையில் அக்காலத்தில் இந்தப் பண்டகசாலை திறக்கப்பட்டிராவிடில் இப்பொழுது இரண்டு தலைமுறைகளுக்குப் பின் வந்த அவர்களது பரம்பரையினர் நல்லுணவையும், நல்லாடையையும் பெற்றுச் சுகவாசிகளாய்ச் சுதந்தர புருஷர்களாய் வாழ்ந்துவர முடியாது. இத் தலைமுறையாரது அதிர்ஷ்ட வசத்தால் அக்காலத்தில் இந்த ஸ்தாபனம் நிலைபெறுவதாயிற்று.

இங்ஙனம் தொடங்கிய அக் கூட்டத்தார்க்கு ஆரம்ப தசையிலேயே "தங்களது ஏழ்மை நிலைமையோடுகூட வேறு பல பகைமைகளும் தங்களுக்கு உண்டு" என்பது வெளியாயிற்று. வேண்டிய பொருள்களை நல்லனவாகப் பெறமுடியவில்லை. அங்கத்தினர்களிற் பலர் அயல் வியாபாரிகளிடம் கடன்பட்டிருந்தனர். கடன்படாத சிலரும் தங்களது கடமையை நன்குணர்ந்து வேண்டியவற்றைச் சரியாக வாங்கிவரவில்லை. 'சரியான அளவு, நிறை, நடுநிலைமை ஆகிய கொள்கைகளைக் கடைப்பிடித்து நடைபெறுகின்றது' என்பதை அறிந்துவைத்தும் 'அயலிற் சிறிது விலை குறைவாக இருக்கின்றது' என்ற காரணத்தாலும், வேறு காரணங்களாலும் எந்த ஏழைகளுக்காக இஃது ஏற்பட்டதோ அந்த ஏழைகளே இதில் அதிகமாகச் சம்பந்தப்படாமல் நிற்கத் தலைப்பட்டார்கள். அந்தப் பொல்லாத அயல் வியாபாரிகளும் வேண்டுமென விலையைக் குறைத்து விற்றுவந்தார்கள். "எப்பொழுதும் குறைந்த விலைக்குக் கொடுப்பவரிடம் மோசச்செயல் இல்லாதிருக்கமுடியுமா?" என்றுகூட அந்த ஏழை அங்கத்தினர்கள் உணரவில்லை. "பிறரால் எவ்வளவு தீமை வந்தாலும் அனுபவிக்க உடன்படுகின்ற இந்த ஏழைகள், தீமையே வாராதிருக்க ஒரு வழியைக் காட்டினால் அதனைப் பின்பற்றி நடக்க மறுக்கிறார்

களே" என்று பொறுப்புள்ளவர்கள் இரங்கலானார்கள். முதலில் அங்கத்தினர்களுக்கு வேண்டிய கோதுமை மா, சர்க்கரை, வெண்ணெய், இறைச்சி என்ற நான்குமே விற்கப் பட்டன. இந்த இயக்கத்திற் பெரிதும் நம்பிக்கை வைத்த பொறுப்பாளிகளாகிய சிறு தொகையினர்மட்டும் எவ்வளவு இடையூறுகள் நேர்ந்தாலும் அவை அனைத்தையும் பொறுத்து

> "இன்னாமை இன்பம் எனக்கொளின் ஆகும்தன்
> ஒன்னார் விழையும் சிறப்பு"

என்ற நீதியைக் கடைப்பிடித்து அங்கேயே தங்களுக்கு வேண்டியவற்றை வாங்கிவந்தார்கள். இவர்களது ஊக்கத்தாலேயே அஃது உறுதி பெறுவதாயிற்று. 'மின்னுக்கெல்லாம் பின்னுக்கு மழை' என்பது மேலோர் வாக்கன்றோ? இந் நிலையில், உறுதியுடனிருந்த அங்கத்தினர் ஒருவர் ஒரு நிர்வாகக் கூட்டத்தில், "சாமான் வாங்காது அங்கத்தினராக மாத்திரம் இருந்து வருபவரை விலக்கிவிடல் வேண்டும்" என்ற ஒரு தீர்மானத்தைக் கொண்டுவந்தார். அது "நமது சங்கத்திற் சேர்ந்ததற்காக ஒருவர் தமது சுதந்தரத்தைஇழந்துவிட முடியாது; சுதந்தரம் எல்லாவற்றிற்கும் மேலானது" என்று மறுக்கப்பட நிறுத்திக்கொள்ளப்பட்டது. நன்மையைத் தரக்கூடியதாயிருப்பினும், புதிதாகச் செய்யப்படின் அதனைப் பலரும் பழிப்பது உலகத்தியல்பு. இந் நிலையில், சிறிதும் சக்தி இல்லாத இருபத்தெட்டு ஏழைத்தொழிலாளர்கள் சேர்ந்து பதினான்கு பவுனுக்கு வாங்கிய சாமான்களைக் கொண்டு தொடங்கிய பண்டகசாலையைக் கண்டு பெரும் பொருளாளர்கள் பழிப்பது ஓர் அதிசயமன்று இவற்றால் கூட்டுறவு என்னும் கடலில் கல்வி, அறிவு, முன்பழக்கம், செல்வம் ஆகிய

திசைகளை அறியாத் தொழிலாளர்களாகிய மாலுமிகள், வாங்கிப் பிரித்துக்கொள்ளுதலாகிய பிரயாணத்தைச் செய்வது முதலிற் சிறிது கடினமாகவே இருந்தது. இவர்களது பண்டகசாலையோ அழகற்றிருந்தது. பிற பொருளாளர்கள் தனிமையில் வைத்திருக்கும் மளிகைகளோ கண்ணைக் கவரும் வனப்பினவா யிருந்தன. இங்கோ வேண்டிய பொருள்கள் முற்றும் கிடைப்பதா யில்லை. அவ்விடங்களிலோ எல்லாம் வேண்டிய அளவு கிடைத்தன. இந்தப் பண்டகசாலையோ அங்கத்தினர்கள் எல்லோருக்கும் எளிதிற் கிடைக்குமாறு சமீபத்திலிருக்கவில்லை. அந்த மளிகைகளோ அங்கங்கு இலகுவிற் பெறுமாறு அமைந்திருந்தன. எனினும், அங்கத்தினர்கள் சில மைல் தூரம் சென்றேனும் இந்தக் கூட்டுறவுப் பண்டகசாலைக்கு வந்துதான் வாங்கிப் போவார்கள் சில சமயங்களில் இக் கூட்டுறவுப் பண்டகசாலைகளில் அவர்களுக்கு வேண்டியன இல்லாமலுமிருக்கும். ஆனாலும், அதுபற்றி அவர்கள் ஒன்றும் குறைகூறாது பொறுமையுடன் திரும்பிச் செல்வார்கள். பாருங்கள்; அந்த ஏழைத் தொழிலாளர்களது பொறுமையையும், உறுதியையும்! இம்மட்டோ அவர்கள் செய்தது. ஒவ்வோர் அங்கத்தினரும் இக் கூட்டுறவுப் பண்டகசாலையின் பெருமையைப் பற்றித் தங்கள் தங்களுடைய பெண்டு பிள்ளைகளுக்கு அடிக்கடி எடுத்துரைப்பார்கள். அவர்களும் 'இக் கூட்டுறவு முறையால் நாம் முன்னேறலாம். இம் முறையைப் பின்பற்றுவதால் இரவு சென்று பகல் வருவதுபோல் இப்பொல்லாத காலம் நீங்கி நமக்கு நற்காலம் கிட்டும்' என்ற நம்பிக்கையுடன் உழைத்து வந்தார்கள். இங்ஙனம் ஒருமனப்பட்டு உழைப்பதன்றோ ஒற்றுமையின் உயர்வாகும்? இவ் வியக்கத்திற் பெண்பாலர்கள் பெரிதும் ஊக்கங் காட்டிவந்தார்கள் என்பதற்கு " அடிக்கடி அருகாமையிலுள்ள ஒரு மளி

கைக்குச் சாமான் வாங்கத் தனது பெண்ணை அனுப்பி வந்தஒரு தாய்,இந்தக் கூட்டுறவுப் பண்டகசாலையிற் சேர்ந்த பிறகு அந்த அருகாமையிலுள்ள வழக்கமாக வாங்கி வந்த மளிகைக்கனுப்பாது தூரத்திலுள்ள இந்தக் கூட்டுறவுப் பண்டகசாலைக்குத் தனது பெண்ணை அனுப்பிவந்தாள். இந் நிலையில் ஒரு நாள் அப்பெண் தனது தாயைப் பார்த்து 'அம்மா, ஏன் என்னை வெகுதூரம் அலையச் செய்கின்றாய்? சமீபத்தில் நல்ல மளிகைகள் பல இருக்கின்றனவே' என, அதற்கு அத்தாய், தனது மகளைப் பார்த்து, 'பெண்ணே, இந்த மளிகைகள் பிறரால் இலாபங்கருதி வைக்கப் பட்டன. ஆனால், அந்த நம்முடைய பண்டகசாலையோ அத்தன்மையதன்று. அதில் வரும் வரும்படியில் நமக்கும் பங்குண்டு' என்றாள். அன்றுமுதல் அப் பெண்மணிக்கு இந்தக் கூட்டுறவுப் பண்டகசாலைக்கு வருவதென்றாற் பெரு மகிழ்ச்சி. வெய்யில், மழை முதலியவற்றையும பாராது அப் பெண் இங்கு வந்தே வாங்கிப்போவது வழக்கம்" என்ற இவ்வரலாற்றை அடிக்கடி சொல்வதுண்டு. பாருங்கள், கூட்டுறவில் அப் பெண்மணிக்கிருந்த உறுதிப்பாட்டையும் நம்பிக்கையையும் ! இஃதன்றோ சரியான கூட்டுறவு ?

இங்ஙனம் உறுதியுடன் தொடங்கி நடைபெற்று வந்த கூட்டுறவுப் பண்டகசாலையின் முதல் ஆண்டு நிறைவு கொண் டாடப்பட்டது. அப்பொழுது அவர்களது உரிமையாக அங்கத்தினர் ஒவ்வொருவருக்கும் ஆறு ஷில்லிங் முதல் இருபது ஷில்லிங் வரையில் மிகுதித் தொகை கிடைத்தது. இரண்டு பென்னை ஒரேமுறையிற் கொடுப்பதற்குப் பெரி தும் கஷ்டப்பட்டுப் பலமுறை அலையவைத்த இந்தக் குபேரர்களுக்கு ஆறு ஷில்லிங் முதல்இருபது ஷில்லிங் வரை யில் ஒருவித சிரமமுமின்றி உரிமையாகக் கிடைப்பதென்

ருல் அஃதென்ன எளிதா? முதலில் இவர்களையும் இவர்களது முயற்சியையும் பழித்த பொருளாளர்களும் பிறரும் தாங்கள் செய்தது பிழை எனக் கண்டுகொண்டார்கள். காலம் ஆக ஆக இச்சிறு பட்டணத்திலே பலவகை மாறுதல்கள் தோன்றின. எங்கேபார்த்தாலும் இக்கூட்டுறவுப்பண்டகசாலையின் பெருமையைப்பற்றியே பேச்சு நிகழ்வதாயிற்று. அங்கத்தினர் ஒவ்வொருவரும் தங்கள் தங்களிடத்திலுள்ள குறைபாடுகளையும் இழிதன்மைகளையும் போக்கிக்கொள்ளலாயினர்; இந்த ஐக்கிய நியாயவாதிகளின் சங்கத்திற் சேர்வதால் வரும் நன்மையைப்பற்றிப் பலருக்கும் போதிக்கலாயினர் வர வரப் பண்டகசாலையும் வளருவதாயிற்று. அதுவரையில் கௌரவ உத்தியோகஸ்தர்களைக் கொண்டு நடத்திவந்தார்கள். இப்பொழுது ஒரு மேற்பார்வையாளரையும் வேலையாட்களையும் சம்பளத்திற்கு நியமித்தார்கள். சுகாதார வசதிகளையும் தேடிக்கொண்டார்கள். கல்வி வசதியும் செய்துகொடுக்கப்பட்டது.

"உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல் மற்றது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து"

என்றபடி அவர்கள் எத்தனைக்காலம் நாம் இப்படி மொத்தமாகப் பிற வியாபாரிகளிடம் வாங்கிச் சில்லறையாகப் பிரித்து எடுத்துக்கொள்வது? ஏன் நாம் நமக்கு வேண்டிய உணவு, உடை முதலியவற்றை உற்பத்தி செய்துகொள்ளலாகாது என்று கருதலானார்கள். அதன பயனாக ஒரு மா அரைக்கும் இயந்திரத்தை வாங்கினார்கள். முதலில் அதன் நிர்வாகத்திற் சிற் சில இடையூறுகள் நிகழ்ந்தன. அதனால் சில பங்குக்காரர்கள் பயந்தார்கள். எனினும், கடைசியில் அது நல்ல வேலை செய்யத் தொடங்கியது. அதன் பயனாக இச்சங்கம் பல கிளைச்சங்கங்களுடன் அதிக அங்கத்தினர்களோடு வளர்வதாயிற்று.

## கிராமங்களிற் கூட்டுறவு

இங்ஙனம் ராஸ்டேல் நகரத்தார் அடைந்துவரும் நன்மைகளை உணர்ந்து பற்பல ஊர்களிலும் இம் முறை கைக்கொள்ளப்பட்டது. இம் முறையைப் பரப்புவதில் ராஸ்டேல் வழிகாட்டிகள் பெரிதும் ஊக்கங்காட்டி வந்தார்கள். எவ்விடத்தில் இத்தகைய நியாய சங்கமாகிய கூட்டுறவுப் பண்டகசாலையை நிலையிட விரும்புகிறார்களோ அவ்விடத்திற்கு ராஸ்டேல் வழிகாட்டிகள் போய்ப் பல உபநியாசங்களைச் செய்வார்கள்; இலவசமாகப் பல துண்டுப் பிரசுரங்களை அளிப்பார்கள்; தாங்கள் இம் முறையைக் கைக்கொண்டு சுயேச்சையாகவும் இன்பமாகவும் வாழ்வதை எடுத்துக் காட்டுவார்கள்; அனைவரும் இம் முறையைக் கைக்கொண்டு இன்புற வேண்டுமென வற்புறுத்துவார்கள்; பிற கடைக்காரர்களுக்கும் இந்தக் கூட்டுறவுச் சங்கத்தாருக்கும் உள்ள வித்தியாசத்தை இனிது விளக்குவார்கள். 'வளம்பட வேண்டாதார் யார் யாருமில்லை' ஆதலினாலே கேட்டோர் அனைவரும் பெரும்பாலும் இம் முறையை ஆதரிக்க முன் வருவார். இம் முயற்சியால் வட இங்கிலாந்தில் சொற்ப காலத்துக்குள் (1854) நூற்றுமுப்பது கூட்டுறவுப் பண்டகசாலைகள் காணப்பட்டன. ஒவ்வொன்றிலும் ஐம்பது அங்கத்தினர்களுக்குக் குறையாமலும் நூறு அங்கத்தினர்களுக்கு மேற் போகாமலும் இருந்தார்கள்.

இங்ஙனம் தோன்றிய கூட்டுறவுப் பண்டகசாலைகளிற் சேர்ந்த அங்கத்தினர்களும் அதனால் வரும் நன்மைகளை அறிந்து பிறர்க்கு எடுத்துரைப்பார்கள். முதன் முதல் எங்கேனும் ஒரு கூட்டுறவுப் பண்டகசாலை நிலையிடப்பட்டால் அதற்கு அங்கத்தினர்களில் யாரேனும் ஒருவர்

அது நல்ல நிலைமைக்கு வரும் வரையில் தமது வீட்டை அதன் உபயோகத்திற்காகக் கொடுத்துதவுவார்; தமது வீட்டாரைச் சம்பளமின்றி அதன் நலத்திற்காக உழைக்கச் செய்வார்.

ஒவ்வொரு சங்கமும் முறைப்படி பதிவு செய்யப்படும். ஒவ்வொன்றுக்கும் சாமான் வாங்கும் பஞ்சாயத்து, சுகாதாரப் பஞ்சாயத்து, பிரசாரப் பஞ்சாயத்து, மேற்பார்வைப் பஞ்சாயத்து முதலிய பலவகை உட் பஞ்சாயத்துக்களும், ஒரு பெரிய நிர்வாகப் பஞ்சாயத்தும் இருக்கும். ஆதலினாலே இவை சாதாரணக் கடைகளாக மாத்திரம் அமையவில்லை; அவற்றிற் சேர்ந்த அங்கத்தினர்கள், அவர்களுடைய குழந்தைகள் ஆகியவர் தங்களுடைய கல்வி, சுகாதாரம், பிற உயிர்வாழ்க்கைக்கும் சுகவாழ்க்கைக்கும் உற்ற வசதிகள் ஆகியவற்றிலும் பெரும் பயன் பெறத் துணை செய்தன. ஒவ்வொருவரும் 'ஊருடன் கூடிவாழ்' என்பதற்குப் பொருந்த நடக்கப் பழகி வந்தனர்; ஒற்றுமையின் பெருமையை விளக்கி வந்தனர்.

ஒவ்வொரு பஞ்சாயத்தாரும் தங்கள் தங்களது பகுதி சம்பந்தமாகப் பெரிதும் பாடுபடுவார். இலவசப் புத்தகசாலை, வாசகசாலை, உபந்யாசம் முதலியன ஆங்காங்கு நிலையிடப்பெற்று நடைபெறும். பாட்டுக் கச்சேரி, தேக் கச்சேரி முதலியவற்றாலும் இம்முறை பரப்பப்படும்.

ஆங்காங்குள்ள சங்கங்களிற் சிறுவர்களுக்கும், விவசாயிகளுக்கும் பொருளீட்டப் போதிய வசதி செய்து கொடுக்கப்படும். சிறுவர்களுக்குப் பைசா நிதி ஏற்படுத்திக் கொடுப்பார்கள். விவசாயிகள் தாங்கள் செய்யும் உழுதொழிலுக்கு வேண்டிய உதவிகளைப் பெறுவதுடன் உற்பத்தியான பொருள்களை விற்பதற்கென வெளியூர்

களுக்கும் பட்டணங்களுக்கும் போகவேண்டியதுமில்லை; வேற்று வியாபாரிகளிடம் கடனுக்கும், குறைந்த விலைக்கும் கொடுக்கவேண்டியதுமில்லை. அவர்கள் தங்களுடைய உற்பத்திப் பொருள்களை இச் சங்கங்களிலேயே சரியான விலைக்குக் கையில் விலைப்பொருளைப் பெற்றுக்கொண்டு கொடுத்துவரலாம்.

இத்தகைச் சங்கங்கள் வளருவதால் ஆங்காங்குக் கிராமச் சண்டைகள் நீங்கின. நியாயஸ்தலங்களுக்குப் போவதும், நியாயவாதி (வக்கீல்) களது உதவியை நாடி அவர்களுக்குத் தாங்கள் அரிதிற் கஷ்டப்பட்டுத் தேடிய பொருள்களைக் கொட்டிக்கொடுப்பதும், வீண் வரிகளுக்கும் தண்டச் செலவுகளுக்கும் உள்ளாவதும், பிற தொல்லைகளுக்கு ஆளாவதும் இல்லாதுபோயின. அன்றியும் ஆங்காங்கு ஒற்றுமை, சமத்துவம், தன்மதிப்பு, அன்பு, நம்பிக்கை, ஊக்கம், உறுதி, உழைப்பு முதலியன வளருதலுற்றன. இவற்றால் இச் சங்கங்களிருக்கு மிடங்களிலெல்லாம் அங்கத்தினர்கள் அனைவரும் செழுமையுற்று இனிது வாழ்ந்துவந்தனர். 'இங்ஙனம் ஒற்றுமையுடன் வாழ்ந்தால் இந் நிலவுலகிலே எத்தனை வருஷந்தான் உயிர் வாழ்தலாகாது' என்று ஒவ்வொருவரும் எண்ணி மகிழ்ந்தனர். அதிகம்சொல்லுவானேன்: கூட்டுறவுப் பண்டகசாலையாகிய இச்சங்கம் நிலைபெற்ற ஊர்களிலுள்ளார் ஒவ்வொருவரும் ஒவ்வொரு 'சிந்தையற்ற பூமண்டல அரசர்' போல வாழ்ந்துவந்தனர் என்பது போதுமானது.

ஒவ்வொரு சங்கத்தாரும் இதன் நன்மையை உணர்ந்து நம்பிக்கையுடன் ஆங்காங்குச் சங்கங்களை நிலையிட முயன்றார்களாதலின் நாளடைவிற் பல கூட்டுறவுப் பண்டகசாலைகள் தோன்றின. அவைகளும் இனிது வளரலாயின.

## பட்டணங்களிற் கூட்டுறவு

இதுவரையிற் கிராமங்களிற் கூட்டுறவு இயக்கம் எப்படி வளர்ந்து வந்தது என்பதைப்பற்றிக் கூறி ேனம். இனிப் பட்டணங்களில் இக் கூட்டுறவு இயக்கம் எங்ஙனம் பரவியது என்பதைப்பற்றிக் கூறுவோம். கிரா மங்களிற்போலவேதான் பட்டணங்களிலும். இரண்டிடங் களிலும் ஏதும் வித்தியாசமில்லை. எங்ஙனம் கிராமங் களிற் குறைந்த அங்கத்தினர்களுடன் தொடங்கப்படுகின் றதோ அங்ஙனமேதான் பட்டணங்களிலும். ஆங்காங்கு உண்டாகும் ஒவ்வொரு பண்டகசாலையும் ராஸ்டேல்நியாய வழிகாட்டிகள்சங்கத்தின் சட்டதிட்டங்களையும், கொள்கை களையுமே பின்பற்றித் தொடங்கப்படுவது குறிப்பிடத் தக்கது. ப்ரெஸ்டன் என்னும் பட்டணத்தில் ஒரு பண்டக சாலை பதினறு அங்கத்தினர்களுடன் தொடங்கப்பட்டது. இப் பட்டணத்திலுள்ள பெண்மணிகளிற் சிலர் கோதுமை மாவை ரொட்டியாக்கியும் உதவுவார்கள். அவர் கள் இப் பண்டகசாலையையும் கவனித்து வருவார்கள். இந்த ப்ரெஸ்டன் பட்டணத்தார் உறுதியுள்ளவர்களும், பிடிவாத குணமுள்ளவர்களுமா யிருந்தனர். கூட்டுறவைப் பற்றிப் பறைசாற்றுவதிற் சிறிதும் பின்னிடைவதில்லை. பல கூட்டங்களை அடிக்கடி கூட்டுவார்கள். எங்கும் கூட்டுற வின் பேச்சாகவே இருக்கும்.

ரக்பி என்ற பிறிதொரு பட்டணத்திம்ல ஒரு கூட் டுறவுப் பண்டகசாலை (17—12—1862) நிலையிடப்பட்டது. அதன் வரலாறு மிகவும் அதிசயமானது; எத்தகையினருக் கும் இந்த இயக்கத்தில் நம்பிக்கையை வளர்க்கவல்லது. அது முதலில் ஒரு வீட்டின் மாடிப்படியில் தொடங்கப் பட்டது. அதற்கான சாமான்கள் ஒரு பெட்டியுள் அடங்கி

யிருந்தன. எவ்வளவு ஏழமை பாருங்கள் ! முதல் வாரத்திலே பத்தொன்பது பவுன் பத்து ஷில்லிங்குக்குத்தான் வியாபாரம் நடந்தது. அது நாளடைவிற் பெரிய கட்டடத்திற்கு மாறித் தற்காலம் மிக மேலான நிலைமையிலிருக்கின்றது. இப்படியேதான் ஒவ்வொரு பண்டகசாலையும் வளர்ந்துவந்தது.

கிராமச் சங்கங்களுக்கும், நகரச் சங்கங்களுக்கும் பெரிதும் வித்தியாசமில்லை என்று கூறினோம். எனினும் பட்டணங்களில் ஒரு பண்டகசாலையை நிலையிடுவதாயிருந்தால் முதலில் நூற்றைம்பது அங்கத்தினர்களும், நூற்றைம்பது பவுனும் வேண்டும் என்பதும், வாரம் ஒன்றுக்குச் சற்றேறக்குறைய நாற்பது பவுன் முதல் ஐம்பது பவுன் வரையில் வியாபாரம் நடைபெறுமா என்பதும் கவனிக்கப்படவேண்டியன. பண்டகசாலையோ கூட்டுறவு முறையைப் பழிக்காது புகழும் ஜனங்கள் வாசம் பண்ணும் இடத்தில் தொடங்கப்படவேண்டும். கிராமங்களில் அதிகமாகக் கிளைப் பண்டகசாலைகள் உண்டாகா. பட்டணங்களில் அப்படியல்ல. எவ்வளவு கிளைப் பண்டகசாலைகளை நிலையிட்டாலும் அவற்றைப் பெரும்பாலும் அங்கத்தினர்களுக்குச் சௌகரியமான இடங்களிலேயே நிலையிட்டு வருவது நிர்வாகிகளது கடமையாகும். ஒரே இடத்தில் பெரிதாகக் கட்டடங்களைக் கட்டிவிடலாகாது. கூட்டுறவுப் பண்டகசாலைகள் பெரிதும் ஏழைகளது நலத்தைக் காக்கவே தோன்றுவன என்பதையும் மறந்துவிடலாகாது.

பட்டணங்களிற் பல இடங்களிற் கூட்டுறவுப் பண்டகசாலைகளின் கிளைகள் உண்டாவது பெரிதும் நன்மையைப் பயக்கும். ஒவ்வொரு பண்டகசாலையும் வெகு சுத்தமாகவும் அழகாகவும் அமைந்திருக்கவேண்டும். வயதானவர்களோ,

பெண்களோ, சிறுவர்களோ யார் வந்தாலும் பண்டகசாலை யின் வேலைக்காரர்கள் அவர்களிடத்தில் மரியாதையாக நடந்துகொள்ள வேண்டியதுடன், நடுநிலைமையுடன் எல்லோருக்கும் ஒரேமாதிரியாக ஒரே விலைக்குச் சாமான் முதலியவற்றைப் பகுத்துக் கொடுத்துவரல் வேண்டும். அங்கத்தினர்களும் பண்டகசாலையின் வளர்ச்சியிலேயே கண்ணுங் கருத்து முள்ளவர்களாய் நம்பிக்கை, உறுதி, நாணயம் இவற்றோடு ஒற்றுமையாக உழைத்துவரல் வேண்டும்; பல நண்பர்களையும் அங்கத்தினர்களாகச் சேர்த்து வரல் வேண்டும்.

மேலும், ஒவ்வொரு பட்டணத்திலும் இங்ஙனம் நிலை யிடப்பட்ட பண்டகசாலைகள் இனிது வளர்ந்த பின்னர் அவற்றின் மிகுதியிலிருந்து முன்னம் ராஸ்டேல் நியாய வழி காட்டிகள் சங்கத்தின் கோட்பாட்டின்படி அங்கத்தினர் களுக்கு வீடுகளைக் கட்டி உதவுதல்; வீடுகளைக் கட்டிக் கொள்ளச் சக்தியற்றவர்களுக்கு நல்ல சுகாதார வசதிகள் நிரம்பிய வீடுகளைக் கட்டிக் குடிக்கூலிக்குக் கொடுத்து உத வுதல் முதலிய பல வழிகளிலும் உதவிபுரிதல் வேண்டும். இங்ஙனமே பல பண்டகசாலைகள் பல பட்டணங்களில் ஸ்தாபிக்கப்பட்டுள்ளன. அவை அங்கத்தினர்களுக்கும் பிறர்க்கும் பல நன்மைகளைச் செய்து வருகின்றன. இவை அனைத்திற்கும் ஆதாரமாயுள்ளது தம்முடைய வீடுகளுக்கு வேண்டிய உணவுப் பொருள்கள் முதலியவற்றை அவர்கள் ஒரே இடத்தில் உறுதியாய் நம்பிக்கையுடன் ஒன்று சேர்ந்து கையில் விலைப்பொருள்களைக் கொடுத்து வாங்கி வந்ததே என்பதும், முதலாளிகளது பொருளும், தொழிலாளிகளது தொழிலும் அல்ல என்பதும் குறிப்பிடத்தக்கன. இந்த உண்மையை உணர்ந்தே அங்குள்ள ஒவ்வொருவரும் தங்

களுக்கு வேண்டியவற்றை இந்தக் கூட்டுறவுப் பண்டகசாலை களிலேயே வாங்கி வந்தனர். இதற்கு மாறாக நடந்தவர்கள் பொதுஜனத் துரோகிகளாகக் கருதப்பட்டார்கள்.

## கூட்டுறவு உற்பத்தி முறையும், மொத்தப் பிரிவினையும்

இப்படிப் பல கூட்டுறவுப் பண்டகசாலைகள் தோன்றி வரவே, அப் பண்டகசாலைகளின் அங்கத்தினர்கள் "நாம் ஏன் நமக்கு வேண்டிய பொருள்களைப் பிற வியாபாரிகளிடம் விலைக்கு வாங்கிவரல் வேண்டும்" என்று கருதலானார்கள். இம் முறைக்கும் ராஸ்டேல் வழிகாட்டிகளே முதன்மை ஸ்தானத்தை வகித்தார்கள்.

உடனே உற்பத்தியின் உயர்வைப்பற்றி "உற்பத்தி பண்ணுதலே உலகத்தில் மிக முக்கியமானது. உற்பத்தி யின்றேல் எதுவும் விரைவில் முடிவுக்கு வந்துவிடும். உயி ருள்ளனவும், உயிரில்லனவுமாகிய ஒவ்வொன்றும் ஆண்ட வனது கட்டளைப்படி புதிது புதிதாக உற்பத்தி பண்ணிக் கொண்டே யிருக்கின்றன. அசையும் பொருள், அசையாப் பொருள், உயிருள்ளன, உயிரில்லன முதலிய அனைத்தும் பூமியிலிருந்தே உற்பத்தியாகின்றன. நாம் வாசம் பண்ணும் வீட்டை எடுத்துக்கொள்வோம். அதற்கு வேண்டிய கல் ஓடு முதலிய மண்ணாலாகிய பொருள்களும், மரம் இரும்பு முதலிய பிற பொருள்களும் பூமியிலிருந்தே கிடைக்கின்றன. இவற்றால் உற்பத்தி இன்றியமையாத தொன்றென்பதும், அதற்குப் பூமியே தகுந்த துணையாக வல்லதென்பதும் ஏற் படுகின்றன. ஆதலின், நாமும் இந்தக் கூட்டுறவு முறையில் நமக்கு வேண்டியவற்றைப் பூமியிலிருந்தே உற்பத்தி செய்து

கொள்ள முயலல் வேண்டும்” என்று ஆங்காங்குப் பிரசாரம் செய்யத்தொடங்கினார்கள்.

இதன் பலனாக ஆங்காங்குப் பல உற்பத்தி பண்ணும் கூட்டுறவுச் சங்கங்கள் உண்டாயின. இங்கு அவற்றின் வரலாற்றைக் கூறுவது பொருத்தமானது. மான்செஸ்டர் பட்டணத்திற்குச் சமீபத்திலுள்ள பெயில்ஸ்வொர்த் என்னும் ஊரிலுள்ள பதின்மூன்று முதல் பதினாறு வயதுக்குட்பட்ட சிறுவர்கள் பலர் ஒன்றுகூடிப் பந்தாடுதல் முதலிய விளையாட்டுக்களிற் காலத்தைச் செலவு செய்யாமல் ஓர் கூட்டுறவுத் தோட்டம் போடுவதாக எண்ணலானார்கள். ஒரு நாள் மாலை தாங்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து குறித்த அளவு ஒரு நிலத்தைக் குத்தகைக்கு வாங்குவதென்றும், அதைத் தாங்களே உழுது, உருளைக்கிழங்கு போன்ற ஏதேனும் ஒன்றைப் பயிரிடுவது என்றும் முடிவினைச் செய்து கொண்டார்கள். முடிவு நல்லதுதான். வெறுங்கை முழம் போடுமா ? பணம் அல்லவோ வேண்டும் ? அடுத்த வாரம் ஒவ்வொருவரும் ஒவ்வொரு பென்னி வீதம் சந்தாச் செலுத்துவது என்றும், அதனால் தாங்களே தொழிலைத் தொடங்கி நடத்துவதென்றும் முடிவினைச் செய்துகொண்டார்கள். எனினும், அவர்கள் எண்ணியபடி நிறைவேறவில்லை. இப்படியே அவ்வூரில் தோன்றிய ஒரு விவசாயக் கூட்டுறவுச் சங்கமும் ஒரு மாடு செத்த காரணத்தாற் கலைந்து விட்டது.

இங்ஙனம் ஆங்காங்குப் பல சங்கங்கள் தோன்றி மறைந்தாலும் அவர்கள் ஊக்கத்திற் குறையவில்லை. இவர்களுக்கு வேறொரு தடையும் இருந்தது. இவர்கள் சாதாரணப் பண்டகசாலைகளை வைத்து நடத்துவதே முதலாளிகளுக்கு வெறுப்பா யிருந்தது என்பது வெளிப்படை. பெரிய வியா

பாரிகள் இவர்களுக்குச் சாமான்களைக் கொடுப்பதில்லை என்ற கட்டுப்பாட்டினையும் செய்துகொண்டார்கள். உற்பத்தி பண்ணுகிறவர்களும் அப்படியே. இவர்கள் கடனாக வாங்குவதில்லையாதலினாலே சிறிது சிறிதாகவே வாங்கிவந்தார்கள். அதனால் இவர்கள் பிற கடைகளைக் காட்டிலும் சிறிது அதிக விலைக்கே பிரித்துக்கொடுக்க வேண்டியிருந்தது. செலவும் இவர்களுக்கு அதிகமாகவே உண்டாயது. (ஆனால் இத்தகைத் தொல்லைகள் அதிக காலம் நீடித்திருக்கவில்லை. நல்ல நிலைமை வந்தவுடன் பிற கடைகளைக் காட்டிலும் குறைந்த விலைக்கும் பிரித்துக் கொடுக்கலானார்கள். முன்னர்ச் சிரித்த பிற முதலாளிகள் இப்பொழுது இவர்களைப் பார்த்துப் பொறாமையும் பயமும் கொண்டார்கள்.) இம்மட்டோ! கூட்டுறவுப் பண்டக சாலைகளுக்கு யாவரேனும் உற்பத்தி பண்ணுபவர் சாமான்களை விற்றால் அந்தப் பொல்லாத முதலாளிகள் அவர்களோடு தாங்கள் சம்பந்தம் வைத்துக்கொள்வதில்லை என்றும் முடிவினைச் செய்தார்கள். இதனால் கூட்டுறவுப் பண்டகசாலையார் பெரிய வியாபாரிகளிடம் அதிக விலை கொடுத்தும் போட்டிபோட்டும் சாமான்களை வாங்கவேண்டியதாயிற்று. ஆனால் இத்தகைய இடையூறுகள் வரலாம் என்பது எதிர்பார்க்கப்பட்டதே. ஆதலின், இவர்கள் அதைக் கருதி ஊக்கங்குன்றாது எல்லாக் கூட்டுறவுப் பண்டகசாலைகளையும் ஒன்றுபடுத்தி ஒரு மொத்தப் பிரிவினைச் சங்கத்தை நிலைநாட்ட எண்ணினார்கள்.

இங்கிலையில் ஓல்ட்ஹாம் ஜில்லாவைச் சேர்ந்த ஜம்புபாரம் என்னும் ஊரில் பூத் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் அடிக்கடி கடைத்தெருவுக்குப் போவது வழக்கம். ஒரு நாள் அவர் அங்கே கூட்டுறவுப் பண்டகசாலைக்காரர்

ஒருவரோடொருவர் போட்டி போட்டுச் சாமான் வாங்கு வதைக் கண்டார்; "ஒற்றுமை அல்லவோ கூட்டுறவின் பொருளாவது? இஃது இதற்கு முரண்படுகின்றதே" என்று எண்ணினார்; உடனே தமது வீட்டில் ஒரு விருந்து அமைத்து அதற்கு எல்லாக் கூட்டுறவுப் பண்டகசாலையிலி ருந்தும் பிரதிநிதிகளை வரவழைத்தார். அதில் அவர் மொத்தப் பிரிவினையின் இன்றியமையாமையைப்பற்றிப் பெரிதும் வற்புறுத்தினார். இறுதியிற் பல கூட்டுறவுச் சங்கங்களும் ஒற்றுமையாக வேலை செய்யவேண்டும் என அவர்கள் முடிவினைச் செய்தார்கள். இம்முறையை ஏப்ரஹாம் க்ரீன்வுட் என்பவர் உறுதிப்படுத்தினார். அன்றியும் அவர், மொத்தப் பிரிவினையால்—

1. "ஒவ்வொரு கூட்டுறவுப் பண்டகசாலையும் குறைந்த விலைக்கு நாணயமான சரக்கை நல்ல இடத்தில் வாங்கிக்கொள்ளுதல்;

2. சிறிய பண்டகசாலைகளும் பெரிய பண்டக சாலைகள்போல ஒரே மாதிரியான சாமான்களை ஒரே விலைக்கு வாங்கிப் பிரித்துக்கொள்ளுமாறு அமைதல்;

3. எல்லாப் பண்டகசாலைகளும் ஒரே இடத்தில் வாங்குவதால் 'பிரித்துக்கொள்ளும் மிகுதித்தொகையும் சமமாகவே இருக்கும்; செலவும் குறைவாகும்' என்ற முறையிற் சிறிய பண்டகசாலைகளுக்கு உற்சாகமாதல்;

4. சிறிய தொகையை வைத்துக்கொண்டு பெருத்த வியாபாரத்தைச் செய்யப் பெரிய பண்டகசாலைகளுக்குத் துணைபுரிதல்;

5. கைதேர்ந்த சொந்தத் தரகர்களாற் குறைந்த விலைக்கு வாங்கிய சாமான்கள் சிறிய பண்டகசாலைகளுக்கும் கிடைத்து வரல்"

ஆகிய பல நன்மைகள் உண்டு என்றும் விளக்கினர். உடனே (11--7—1863) "வட இங்கிலாந்து மொத்தக் கூட்டுறவுப் பிரிவினைச் சங்கம்" என்ற பெயருடன் ஒரு சங்கம் பதிவு செய்யப்பட்டது. சில நாட்களுக்கெல்லாம் (14—3—1864) அது தனது வேலையைச் செய்யத் தொடங்கியது.

ஒவ்வொரு பண்டகசாலைக்காரரும் தத்தமக்கு வேண்டிய சாமான்களை இம் மொத்தக் கூட்டுறவுச் சங்கத்திலேயே வாங்கி வந்ததால் இது நாளடைவில் ஓங்கி வளருவதாயிற்று. வளரவும், இச்சங்கத்தார் தங்களுக்கு வேண்டிய எல்லாப் பொருள்களையும் வாங்கி வந்தார்கள்; தங்களுடைய சாமான்களை அவ்விடங்களுக்கு அனுப்புவதற்குத் துணையாயிருக்கும் பொருட்டுப் பல கப்பல்களைச் சொந்தமாக வாங்கினார்கள்; இச்சாமான்களை உற்பத்தி பண்ண நிலங்களையும் பல இயந்திர சாலைகளையும் நிலைபிட்டார்கள். இச்சாலைகள் ஒருவருக்கெனத் தனித்துச் சொந்தமானவையல்ல. ஆதலின், அங்கே வேலை செய்யும் தொழிலாளர்கள் நன்கு நடத்தப்பட்டார்கள். அவர்களும் "நமது வேலை, நமக்கும் நமது சங்கத்துக்கும் நன்மையைக் கொடுக்கின்றது. நாமே முதலாளியாகவும், தொழிலாளியாகவும் இருக்கிறோம்" என்று மகிழ்ந்தார்கள், இந்த மொத்தக் கூட்டுறவுப் பிரிவினை பெரிதும் வளர்ந்து கூட்டுறவுக்காரர்களுக்கும் பிறர்க்கும் நன்மையைப் பயந்து வருகின்றது.

இப்பொழுது (1916) அந்த ராஸ்டேல் பண்டகசாலை இருபத்தோராயிரத்துத் தொண்ணூறு அங்கத்தினர்களைக் கொண்ட நாற்பத்தெட்டுக் கிளைச் சங்கங்களைப் பெற்றிருக்கிறது. சற்றேறக்குறைய அப்பட்டணத்தின் ஜனத்தொகையின் மூன்றிலொரு பங்குக்கு இதன் அங்கத்தினர்களது தொகை உயர்ந்துவிட்டது. சராசரி ஒரு குடும்பத்

திற்கு மூன்று பேர் இருப்பதாக வைத்துக்கொண்டால் அப் பட்டணம் முழுவதும் இக் கூட்டுறவுப் பண்டகசாலையின் சம்பந்தத்தைப் பெற்றிருக்கின்றது என்றே கூறவேண்டும். இன்றைக்கோ இன்னும் அதிகமா யிருக்கின்றது என அறியப்படுகின்றது. மனித வாழ்க்கைக்கு வேண்டிய எல்லாப் பொருள்களும் இதில் கிடைக்கின்றன, இதற்குச் சொந்த மாகப் பல பெரிய கட்டடங்களும், பல விளைநிலங்களும், பல கப்பல்களும், பல புகைவண்டிகளும், பன்னீராயிரம் புத்தகங்களைக்கொண்ட ஒரு புத்தகசாலையும், பல பத்திரி கைகள் கிடைக்கக்கூடிய வாசகசாலையும், இரண்டாயிரம் பேர் கூடக்கூடிய ஒரு பெரிய பிரசங்க மண்டபமும் உண்டு.

வாசகர்களே, ‘இந்த ஒரு சங்கம் மாத்திரமே வளர்ந்து வந்திருக்கின்றது’ என்று நீங்கள் எண்ணிவிடலாகாது. இதைப் பார்த்துத் தொடங்கப்பட்டனவாகச் சற்றேறக் குறைய நாற்பது லட்சம் அங்கத்தினர்களைக் கொண்ட ஆயிரத்தைந்நூறு பண்டகசாலைகள் இப்பொழுது இங்கி லாந்தில் மாத்திரம் இருக்கின்றன. இம் முறை நாளடைவில் ஐரோப்பா முழுவதும் பரவி ஏழை ஜனங்களுக்குப் பெரிதும் நன்மையைச் செய்துவருகின்றது.*

---

* இப்பொழுது இந்தியாவிலும் பரவி வருகின்றது. திருவல் லிக்கேணியிலிருக்கும் கூட்டுறவுப் பண்டகசாலையும் இம் முறை யைப் பின்பற்றி நடந்துவருவதே. நமது மாகாணத்தில் வேறு பல பண்டகசாலைகளும் இருக்கின்றன.

## கூட்டுறவு இயக்கத்தின் மகா மந்திரம்

இவ்வளவுங் கூறியபடி கூட்டுறவு முறையைப் பின்பற்றி நடப்பதாற் கிடைக்கும் நன்மைகள் இவை என்பது வெளிப்படையானதே. எனினும், மீண்டும் ஒரு முறை அவற்றைக் கூறுவது இவ் வியக்கத்திற்குப் பெரிதும் நன்மையைப் பயக்குமாதலின் அவற்றைத் தொகுத்துச் சிறிது கூறுவோம்.

'எல்லார்க்கும் ஒருவர் ; ஒருவர்க்கு எல்லாரும்' என்ற இத் தொடரே இந்த இயக்கத்தின் தத்துவப் பொருளை வெளியிடுவது. அதைக் கருதியே இதனைக் 'கூட்டுறவு இயக்கத்தின் மகா மந்திரம்' என்றது. சற்று ஊன்றி நோக்குவார்க்கு இதனிலும் மேலானதாகப் பிறிதொரு கொள்கை இருக்க முடியாதென்பது இனிது புலனாகும்.

இஃது உடலைப்பற்றியது ; உளத்தைப்பற்றியது ; உயிரைப்பற்றியது என மூன்று வகைப்படும்.

ஓரூரில் இரண்டு ஏழைக் குடும்பத்தினர் இருந்தனர். இருவருக்கும் ஒரே அளவு வரும்படி எனினும், ஒருவர்க்கு மூன்று குழந்தைகள் ; மற்றொருவர்க்கு ஒரே குழந்தை. இந்த இரண்டு வீட்டின் தலைவரும் முறையே வாரத்திற்கு ஒவ்வொரு பவுன் வீதம் தத்தம் மனைவியரிடம் வீட்டுச் செலவுக்கென கொடுப்பதுவழக்கம். மூன்று குழந்தைகளைப் பெற்ற பெண்மணி ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் அங்கத்தினளா யிருந்தாள். மற்றொருத்தி அப்படியில்லை. முன்னவள் தனது வீட்டிற்கு வேண்டிய சாமான்களைக் கூட்டுறவுப் பண்டகசாலையிலேயே வாங்கி வந்தாள். அதனால் அவள் 'தான் வாங்கும் சாமான்கள் நல்லனவாகவும் சரியான நிறை அளவுகளை உடையனவாகவும் இருக்கின்றன' என்ற நம்பிக்கையுடன் இருந்தாள். அன்றியும், அவள் மூன்று

மாதத்திற்கு ஒரு முறை அவசியமானுல் தான் வாங்கின சாமான்களின் வீதப்படி தனக்குக் கிடைக்க வேண்டிய மிகுதித் தொகையை வாங்கிக் குழந்தைகளுக்குச் சட்டை, செருப்பு முதலியவற்றை வாங்குவாள். இன்றேல் அந்த மிகுதித் தொகைக்குச் சங்கத்தாரால் வட்டி கொடுக்கப் படும்.

பின்னவளோ ஒரு தனி மனிதன் வைத்த கடையிலே தனக்கு வேண்டிய சாமான்களை வாங்கி வந்தாள். ஆதலின், அவளுக்குச் சாமான்களிடத்திலும் நம்பிக்கையில்லை. சில கெட்ட சாமான்களும் வந்தன. அன்றியும், அவள் கடையில் நினைத்தபோது கடனுகச் சாமான்களை வாங்கிவருவாள். அதனுல் அவளுக்குக் கடனும் அதிகப்பட்டுக்கொண்டே வந்தது.

பாருங்கள் ! கூட்டுறவுப் பண்டகசாலைகளால் உண்டாகும் நன்மைகளை. இது மூன்று பேருக்குப் போதிய உணவு, உடை முதலியவற்றைப் பெற முடியாது கடன்படும் வரும்படியைக்கொண்டு ஐந்து பேருக்குப் போதிய உணவு, உடை முதலியவற்றைப் பெற்று மிகுத்து வைக்கவும் உதவி புரிகின்றது என்பது இதனுல் விளங்கவில்லையா ? இன்னும் கூறுவோம்.

ஓரூரில் ஒரு பெண்மணி தனியாக வாழ்ந்து வந்தாள். அவள் எப்பொழுதும் நன்றாய் உழைத்துப் பாடுபடுபவள். வெகு கவனமாகக் குடும்பத்தை நடத்துபவள். ஆனுல், அவள் தனக்கு வேண்டிய சாமான்களைப் பலசரக்குக் கடையொன்றில் வாங்கிவந்தாள். அவள் எவ்வளவு உழைத்தும், எவ்வளவு கவனமாயிருந்தும், அவசியமான சாமான்களையே வாங்கியும் கடையிற் கொஞ்ச காலத்திற்கெல்லாம் கடைக்

குப் பதினாறு பவுன் கடன் கொடுக்கவேண்டிய நிலைமைக்கு வந்தாள்.

அப்படியாக ஒரு நாள் அடுத்த வீட்டுப் பெண்மணி ஒருத்தி இவளை அழைத்து, "நங்காய், நீ ஒரு தனித்த மனிதனது கடையிலே சாமான் வாங்கினதால் உனக்கு இவ்வளவு தொல்லைகள் நேர்ந்தன. நான் இப்பொழுது உனக்கு அப் பதினாறு பவுனையும் தருகிறேன். நீ இனி ஒரு கூட்டுறவுப் பண்டகசாலையில் சேர்ந்துகொள். அந்தக் கடைக்காரன் கடனைத் தீர்த்துவிடு" என்று சொன்னாள். இவளும் அதற்கு உடன்பட்டாள். அன்றுமுதல் அவள் கடன் வாங்குவதுமில்லை; கூட்டுறவுப் பண்டகசாலையைத் தவிரப் பிற கடைகளிற் சாமான்களை வாங்குவதுமில்லை. இப்படிச் சில மாதங்கள் செல்ல ஒரு நாள் அவள் முன்னே தனக்குப் பதினாறு பவுனைக் கொடுத்துதவி நற்புத்தி புகட்டிய அப்பெண்மணியைப் பார்த்து மகிழ்ச்சியோடு "அம்மா, தாங்கள் காலத்தாற் செய்த உதவியை யான் என்றும் மறவேன். தாங்கள் காட்டியவண்ணமே யான் நடந்தேன். இப்பொழுது எனக்குக் கடன் என்பது கிடையாது. இனி யான் எக்காரணம்பற்றியும் கடன் வாங்க மாட்டேன்" என்று கூறினாள்.

அன்றியும் இந்தக் கூட்டுறவு முறையைக் கைக்கொண்டவர்கள் நல்ல வீடுகளையும் சுகாதார வசதிகளையும் பெற்றார்கள்.

இவற்றால், இக் கூட்டுறவு இயக்கத்திற் சேர்ந்தவர்களுக்குப் போதிய செலவு செய்யச் சக்தியும், கடன்படாமலிருக்க வழியும், பணத்தைச் சேர்ப்பதற்கும் நல்ல வீடுகளில் வாசம் செய்வதற்கும் நல்ல உணவுகளை உண்பதற்கும் உதவியும் ஏற்படுகின்றன என்பது விளங்கும்.

இதுவரையிற் கூறியன உடலைப்பற்றி வரும் நன்மைகள். இனி உளத்தைப்பற்றியது வருமாறு:—

இந்த இயக்கத்திற் சேர்ந்தவர்கள் இலகுவில் நல்ல கல்வியைப் பெறுகிறார்கள். இதற்கெனத் தனியாகப் பொருட்செலவு கிடையாதாகையினாலே ஆண் பெண் அனைவருக்கும் இந்த நன்மை எளிதிற் கிடைக்கின்றது. அவர்கள் சிறிது நன்னிலையை அடைந்ததும் உலக விஷயங்களை அறிந்து கொள்ள விரும்புகிறார்கள்; கூட்டுறவுச் சங்கங்களின் கூட்டங்களுக்குச் செல்லுகிறார்கள்; அங்கே பேசப்படுவனவற்றைக் கவனமாகக் கேட்டுத் தாங்களும் தங்களது கருத்தைக் கூசாமல் எடுத்துக் கூறுகிறார்கள்; இவற்றிற்குத் துணையாயிருக்கும் பொருட்டுப் புத்தகசாலைகளிலே போய் நன்கு படிக்கிறார்கள்; வாசகசாலைகளிலுள்ள 'கூட்டுறவு வர்த்தமானி' போன்ற பல பத்திரிகைகளைப் படிக்கிறார்கள்; தங்களையொத்த பலருடன் அளவளாவி விஷயங்களை நன்கு அறிந்துகொள்ளுகிறார்கள்; தங்களால் நடத்தப்படும் பல உபந்நியாசங்களாலும், பாட்டுக் கச்சேரி தேக் கச்சேரி முதலியவற்றாலும் இன்புறுகிறார்கள்.

இன்னும் இவர்கள் எல்லோரும் ஒரே வகையான உரிமையுள்ள கூட்டுறவாளர்களாகையினாலே 'கூட்டுறவு மகாநாடு'களுக்குப் பிரதிநிதிகளாகச் சென்று அங்கே கூட்டுறவு வளர்ச்சியைப்பற்றி நடைபெறும் வாதங்களிற் கலந்து கொள்ளுகிறார்கள். இங்ஙனம் பழகுவதால் இவர்களது அறிவு பெருகிப் பல விஷயங்களிலும் நல்ல பயிற்சி உண்டாகின்றது. அதனால் இவர்கள் நல்ல குடிகளாகிறார்கள்; தாங்கள் வாழுமிடத்தின் சுகாதாரம், கல்வி, பிற பொதுக் காரியங்கள் முதலியவற்றை உயர்த்திக்கொள்ளும் முறையிலே தங்களுக்குத் தாங்களே உதவிசெய்துகொள்ளச் சக்தியுள்ளவர்களாகவும் ஆகிறார்கள்.

இனி, மூன்றாவதாகிய உயிரைப்பற்றியது வருமாறு :—

இது முற்கூறிய இரண்டைக் காட்டிலும் மிக மேலானது. இக் கூட்டுறவு இயக்கம் தன்னைச் சேர்ந்தவர்களுக்கு 'எல்லோரும் கடவுளாற் படைக்கப்பட்டவர்களே' என்பதை வற்புறுத்தும் முறைமையிற் சகோதரத் தன்மையை உபதேசிக்கின்றது. கூட்டுறவு ஸ்தாபனங்கள் உலகினரது ஒற்றுமைக்குற்ற வெற்றிக்கொடிபோல விளங்குகின்றன. சங்கத்திற்குச் சொந்தமான விளைநிலம் கட்டடம் கப்பல் பிற சொத்துக்கள் முதலியன எல்லா அங்கத்தினர்களுக்கும் உரியன. ஆதலின், அவைகள் 'எனது, உனது' என்ற பேதங்களை நீக்கி 'நமது' என்ற பொதுத் தன்மையை அங்கத்தினர்களுக்குப் போதிக்கின்றன. இந்த இயக்கத்திற் சேர்ந்தவர்கள் "நமக்கு இவ் விஷயத்திற்கு உதவி புரிவோர் ஒருவருமில்லையே" என்று கவலையுறவேண்டியதில்லை. சங்கத்தைச்சேர்ந்த எல்லோரும் சகோதரர்களாதலின் இந்த இயக்கம்பிறருடையசெல்வத்தைக்கண்டுபொறாமைப்படுவதில்லை. 'ஒற்றுமையே உயர்வானது; எல்லோரும் சமமானவரே' என்ற கொள்கைகளுடன் தன்னைத் தானே முன்னேற்றிக் கொள்ளத் துணைபுரிவது. தன்னைச் சேர்ந்த அங்கத்தினர்களது 'நான்' என்னும் அகப்பற்றையும், 'எனது' என்னும் புறப்பற்றையும் போக்கி அவர்களுக்கு 'நமது' என்னும் பொதுப்பற்றை வளர்ப்பது.

இவ்வளவுங் கூறியது கொண்டு இந்தக் கூட்டுறவு இயக்கம் 'மக்களாவரைப் பெரிதும் நலியச் செய்யும் வறுமைத் துன்பத்தினின்றும் விடுவித்து அடிமைத் தொழிலைப் போக்கிச் சுயேச்சையாய்ச் சுதந்தர புருஷர்களாய்த் தம்மைத் தாமே நம்பி ஒற்றுமையுடன் அகப்பற்று

புறப்பற்றுக்களை நீக்கி இனிது வாழ்ந்துவரச் செய்கின்றது' என்பது விளங்கும்.

ஆதலின், இதனைக் கண்ணுறும் சகோதர சகோதரிகள் இனியேனும் கண் விழித்தவர்களாகி முதலில் தங்கள் தங்களது வரக்குச் செல்லுமிடங்களில் எல்லாம் கூட்டுறவுப் பண்டகசாலைகளை நிலையிட முயலவேண்டும். முன்னரே ஒரு கூட்டுறவுப் பண்டகசாலையிற் சேர்ந்திருந்தால் அப் பண்டகசாலையைப் பலப்படுத்த ஆங்காங்குப் பலத்த பிரசாரத்தைச் செய்து அங்கத்தினர்களைச் சேர்க்கவேண்டும். "இக் கூட்டுறவு முறையினாலே தான் நமக்கு விடுதலை கிடைக்கும்" என்ற நம்பிக்கையுடன் உறுதியாய் உழைக்க வேண்டும். "மன்பதைக் கின்பொடு துன்புதந் தகற்றல்— மன்னவர்க் காகா வழிவே றவைக்கே" என்றதிற் பயின்று வரும் வேறு வழி இக் கூட்டுறவு இயக்கமே என்பதும் அறியத்தக்கது.

நலன்

# அநுபந்தம்

## தேவை

உலகம் வேண்டுவ தொன்றே யாகும் ;
என்னெனிற் கேளீர் இயம்புவன் ; அதுதான்,
அறிவும் ஒழுங்கும் அன்றே ; யார்க்கும்
அன்னம் முதலாத் துன்னிய பலவுங்
கொடுத்துத வுவதாங் கொள்கையு மன்றே ;
அதிகா ரிகள்புன் முறுவலு மன்றே ;
எதனையும் அழியா தெழுதும் சீரிய
கைவன் மையும் அன்றே ; மெய்யோ
டுறுதியாய் உழைத்தலி லுள்ளம்
தளரா தமையாண் டன்மைசேர் மக்களே.

## மக்கட் பகுப்பு

மாண்புறு மனமே மாண்புறு மனமே
மக்கட் பகுப்பை வகுத்துரைப் பாயென
மதித்தெனைக் கேட்கும் மாண்புறு மனமே
அதற்கோ ரிறையை யறைகுவ னதுதான்
தன்னல மிழந்துந் தான்பிறர்க் கோவா
நன்னலம் புணர்ப்போன் நன்மக னவன்
தன்னலம் போற்றிப் பிறர்நலம் பார்க்குந்
தந்திரச் செயலோன் சாமா னியமகன்
தன்னலம் பேணுவ தொன்றையே பொருளாக்

கொண்டுவாழ் தலைமேற் கொண்டவன் மக்களுள்
அரக்கன் தனக்கு மேனைப் பிறர்க்கும்
பயன்படா தொழியும் பண்புமேம் படீஇய
மக்க ளுருக்கொடு திரியும் மாக்கட்
கொருபெயர் வகுத்தீண் டுரைத்த
லெம்ம னோருக் கியலலோ வரிதே.

## பொருட்பயன்

உலகில்எண் பெறுதற் குறுதுணை யாவது
பொருளல் லவரையும் பொருளாச் செயவல
பொருளே ஆதலிற் போற்றுக பொருளைப்
புவியிசை வாழ்வோய் என்றே புகட்டும்
புண்ணிய மனமே நண்ணிய பொருளும்
பிறருக் குதவும் பேறுறு தெனிலோ
இகழுவே படுமால் எங்ஙன மோவெனில்
இருபக் கத்தும் இரவோற் குறுகலை
ஒருபடித் தெனினும் தருவதால் நிலவை
வளர்பிறை தன்னை வாழ்த்தித் தேய்பிறை
தன்னைப் பழிப்பர் தரணியோர் கண்டனை
ஆதலின் மனமே யாண்டும் எவர்க்கும்
பயன்படு பொருளை பாருட்
பண்புடைத் தாமெனப் பயின்றுவாழ் குவையே.

---

## ஒற்றுமையும் பகுத்தறிவும்

உலகத் தவரே உலகத் தவரே
பலபல பாடுகள் பட்டுச் சோர்ந்து
வலியற் றொடுங்கு முலகத் தவரே
ஒற்றுமை யின்றிப் பெற்றபே றெண்ணே

வலியில தாகும்; வாய்த்த பகுத்தறிவு
இன்றிப் பெருகும் ஒற்றுமை எனிலோ
பயனில தாகும் பார்த்தனம் அதனால்
ஒற்றுமை உலகறி வுடனெண்
பெற்றனிர் சேர்ந்துநற் பேறடை வீரே.

## வாங்குவோர் வன்மை

தேசத் தீரே தேசத் தீரே
மோசம் போகும் தேசத் தீரே
கூட்டுமளி கைக்காங் கொள்கையைக் கேண்மின்
அதுதான் செல்வர் முதலும் அன்றே
தொழிலா ளிகள்செய் தொழிலும் அன்றே
மற்றென் னேனெனின் மனைக்கு வேண்டுஞ்
சரக்குக் கென்றே தங்கந் தன்னைக்
கொடுத்து விலைக்குக் கொள்ளும் நிலையினி
லுள்ளநம் போன்றோர் உறுதியே யாகும்

ஆதலின் தேசத் தன்பர்காள் வந்திக்
கூட்டுமளி கையினிற் கொண்டுநம்
நாட்டிற் கின்பம் நாட்டுமின் நயந்தே.

## கூட்டுறவு இயக்கம் தோன்றிய முறைமை

நண்பரீர் அருமை நண்பரீர் இருமையும்
நம்மவர் இன்புறச் செம்மையின் ஆய்ந்தால்
யாவரும் ஒன்றாய்க் கோஎனும் கூட்டுறவு
இயக்கப் தன்னில் மயக்கம் நீங்கிச்

சேர்ந்துவாழ் குவதே தேர்ந்தநல் முறையாம்
என்றினிது உரைக்கும் நன்றுசூழ் நண்பரீர்
அருளே அன்பே பொருளே எனும்இவை
பிள்ளையே தாயே கள்ளம்இல் செவிலியே
என்றபேர் உறவில் பொன்று துலகை

வளர்த்தலுக் குழைக்கும் உளத்தினர்க் கியைந்த
கூட்டுற வியக்கம் நாட்டினில் எங்ஙனே
தோன்றிய தாம்அதன் ஆன்றசீர் முறைமை
ஈதெனக் குறித்திங் கோதுக எனக்கென்று
உரிமையில் வினவும் அருமைசேர் மனத்துச்

சோதரர் கேளீர் ஆதர வாய்இதை
உலகினர் தம்முள் சிலவலி மையினர்
நிலனே வேலையே மலையாம் முதலே
என்றமூன் றனையும் நன்றுல குண்பான்
தந்தும் செய்தும் முந்துறக் கொடுத்தும்

பலன்களை விளைவித் திலங்கிடச் செய்தோம்
ஆதலின் எமக்குப் போதிய பகுதியும்
சீரிய கூலியும் நேரிய வட்டியும்
கிடைப்பதே உரிமையும் கடமையும் ஆகும்
என்றறம் உரைப்பார் போன்றிவண் ஒன்றாய்த்

தனித்தனி கூடினர் தத்தம் நலத்தைப்
பெருக்கிக் கொண்டனர் செருக்கும் கொண்டார்
எனினும் தமக்கித் தனையும் ஆம்ஆறு
உவந்தனர் அளிக்கும் தவப்பெரி யவர்ஆம்
ஒருகுழு வினரை மறந்தனர் அறவே

அவரே வாங்குநர் அவரே நாமும்
யாங்ஙனம் எனிலோ வாங்குதல் செய்யா
தேவரும் இனிதாய் மேவுயிர் வாழ்தல்
அவனியில் அமைகுவ தன்றும் ஆதலின்
இங்ஙனம் ஆகத் தங்கம் தன்னை

முன்னே கொடுத்துப் பின்னே எதும்
பயன்பெறு தொழியும் அயர்வுறும் அந்தக்
குழுவினர் விழித்தனர் எழுந்தனர் கூடினர்
தத்தம் கருத்தை அத்தினம் கூறினர்
செப்பிய மூவர்க் கிப்புவி தன்னில்

இருக்கும் உரிமைகூண் டிருக்கும் நமக்கும்
உளதே ஆகும் எளிதன் றிலையெனல்
ஆதலின் யாமும் ஓதிய மூவர்க்கு
எவ்வள வுரிமையோ அவ்வள வுமுனே
கொடுத்தபின் மிகுந்த கோடிக் கணக்காம்

பொருளைப் பெறுதற் குரிமையைப் பெற்றுளோம்
அன்றியும் நம்மவர்க் கொன்றிய வறுமையும்
பிணியும் பழியும் தணியுந் தொலையும்
அழியும் அதனால் ஒழியும் அடிமை
கடனும் இலாபமும் சடும்கொடு வட்டியும்

பறந்துபோம் என்றுயர்ந் தறிந்தனர் ஒன்றாய்ச்
சேர்ந்தனர் இதுவே தேர்ந்துயான் கூறும்
கூட்டுற வியக்கை நாட்டிய
வரலா றாகும் வரும்உயர் நலமே.

## நான் கூட்டுறவு இயக்கத்திற் கூடியிருப்பதேன்

அன்பர்கா ளேழை யன்பர்கா ளடியேன்
கூட்டுற வியக்கிற் கூடியோ ரங்கத்
தினனா யிருத்த லெதனா லெனிலோ
கூறுவன் கேண்மின் கொள்ளுமி னவைதா
மெனையறி யாமலு மியலா வென்னைச்

சிறிதும் வருந்தச் செயாமலும் பொருளை
மிகுத்தெனக் களிக்கத் தகுந்த துணையாய்
விளங்குவ தாயதும் வேண்டுஞ் சரக்கை
விளைவித் தாக்கலும் விற்றலும் வாங்கலு
மென்றொழி லாகவே யிருப்பதும் இனிதாம்

நயமிகு சரக்கும் நாணய வளவும்
நேரிய விலையும் நிலைத்த தாமென
நம்பிக் கையுடன் நாளுநா ளிருத்தற்
குதவியே புரிவதும் உழையா முதலுறு
பெருவியா பாரிகள் பேசிக் கொடுசெயும்

பழிமிகு கட்டுப் பாட்டா லுண்டாந்
துன்பந் தவிர்த்தியா ளின்பமே யடையத்
துணையா குவதும் இணையிலா விலாபம்
பெறமுயல் வணிகர் பேச்சாம் மாய
வலையிற் சிக்கியா ளலையா தொதுங்க

வழிகாட் டுவதும் ஒழியா தென்றும் ·
வேலைசெய் பவனுமவ் வேலை தன்னால்
ஊதியம் பெறுதற் குறுமுத லாளியும்
நானே யாகியான் நாடிய பொருளைத்
தேடிக் கொள்ளக் கூடிய துணையா

யிருப்பதும் எவர்க்கு மெல்லாச் சரக்கு
மலிவாய்க் கிட்டச் சலியா துழைத்துக்
கொடியவல் விலையைக் குறைத்தற் குதவி
புரிகுவ தாயதும் புவியிலென் னைநிக
ரேழைய ருடனே சூழ விருந்தவர்க்

குறுசுகம் துக்கம் இலாபம் நஷ்டம்
தம்மை அறிந்தவை தமக்குப் பொருந்த
நடக்கவேண் டியவென் கட்பாட் டினையான்
கைக்கொண் டொழுகுவ தாயதும் கருதியோர்
வகையிலென் றேசச் சான்றோர் வகுத்து

வந்ததும் வேற்று நாட்டு மாந்தரு
ளேழை மக்களு மேழைய ரிடத்துப்
பட்சமே கொண்ட பணக்கா ரர்களு
மின்னுங் கைக்கொண் டின்புற் றிருப்பதும்
நம்மவ ருழுதொழில் கைத்தொழில் வாணிக
மென்றிவை யினிதுமுன் னேறுதற் கேற்ற
பற்பல நடுநிலைக் கற்பனை தம்மைப்
போதிக் கின்றதும் ஏதிலா ரோடும்
பொருந்திவாழ்ந் திடவும் போரே இல்லா
திருக்கவு மிடந்தரு கின்றதும் எவர்க்குந்
தீங்குசெய் யாமல் நன்மையொன் றினையே
செய்குவ தாயதும் சேர்ந்தநம் மவரை
யாண்டுமுன் னேற்றத் தீண்டிய பற்பல
துறைகளுள் முதலிற் சொல்லத் தகுந்ததும்
அன்றியும் நம்மவ ராய்ந்துகைக் கொண்டால்
நன்றுமுன் னேறுவ ரென்றநம் பிக்கையைத்
தருவது மாகிய தகுதிப்
பெரும்பய னன்பர்காள் பேசிலோ பெரிதே.

## கூட்டுறவு இயக்கத்தின் குணம்

ஏழை மக்காள் ஏழை மக்காள்
வாழா தழியும் ஏழை மக்காள்
நாமோ நாளும் நாளும் பலபல
பாடுகள் பட்டுக் கேடுகட் காளாய்
உடலை வருத்தி உழைத்துழல் கின்றோம் ;
அன்றியும் அன்பர்காள் அரிசியும் ஆடையும்
கிடையா தொழியவும் மிடியே பொருளாய்ப்
பெண்டுபிள் ளைகளைக் கண்டு வருந்திச்
சாவாப் பிணமாய் ஓவாக் கவலையில்

அழுந்திப் பெரிதும் நலிந்திளை கின்றோம் ;
அதனால் உழையா முதலா ளிகளெனும்
ஒருகூட் டத்தார் வருபெரும் பொருளைப்
பெற்றுச் சுகமோ டுற்றுவாழ் கின்றனர் ;
ஆதலின் உழைக்குந் தோழர்காள் சேர்ந்து
வாரீர் வாழும் வழியைத் தேடீர்
அதுதான் யாதெனில் அறைகுவன் கேளீர்
சேர்ந்தோர் எவர்க்கும் நேர்ந்துத வுவதும்
தொழிலா ளிகளை முதலா ளிகளாச்
செய்துயர்த் துவதும் சேவக மென்னும்
பெயரையும் போக்கிச் சுயமரி யாதையொடு
எவனையும் தானே தனக்குத் துணைவன்
என்னும் பழமொழி தன்னை உணர்ந்து
மேன்மே லோங்கி வளரச் செய்வதும்
தொல்சீர் பரவிய தூய சுதந்தரம்
என்னும் இணையில் இன்பம் அளிப்பதும்
ஆகிய புகழுக் ககமாம்
கூட்டுற வியக்கிற் கூடிவாழ் குவதே.

## வட்டிக் கொடுமை

### ஒருவகைச் சிந்து

மானிடர் காள் நன்றுகேளீர் — மண்ணில்
வட்டிக் கொடுமைகள் தம்மை

உலகிற் புகழ்ச்சி இகழ்ச்சி — என்றிங்
குற்ற பயன்கள் இரண்டாம்.

அவ்விரு பேறுகள் தம்முள் — முன்னர்த்
தாகும் புகழ்ச்சி பெறவே

முன்னுவர் உலகோர் வகையே—ஒன்றி
முற்றிலும் வாழ்வதே வாழ்வாம்.

என்றமுன் னோருரை பற்றி—இங்ஙன்
ஏற்ற புகழ்ச்சிபெற் றென்றும்

இன்புற் றிருத்தற்கு வட்டி—தன்னை
ஏற விதித்துத்தந் திரங்கள்

பேசிப் பிறர்பெறும் பாடே—பட்டுப்
பேணிப் பெறும்பொருள் தம்மைத்

தட்டிப் பறித்தல் தடையாம்—நல்ல
சாத்திரங் கற்ற பெரியோர்

ஏசிப் பழித்துரை செய்வார்—மற்றிங்
கெல்ல வரும்இகழ் வார்காண்

அன்றியும் சோதரத் தன்மை—தன்னை
ஆணிவே ரோடு களையும்.

அன்பரு ளாகும் குணங்கள்—தம்மை
அறவே விலக்கி அழிக்கும்.

மக்கட் பெருமையைப் போக்கும்—தக்க
வாழ்க்கைக்கும் இன்னல் விளைக்கும்.

பகைவர் தம்மைப் பலராக்கும்—பொல்லா
பாவச் செயல்கட் குள்ளாக்கும்.

போற்றிய செல்வங்கள் தம்மை—முற்றும்
போக்கித் தவிக்கப் புரியும்.

இவ்வள வேயோ கொடுமை—இவர்க்
கிறுதியை யும்வரச் செய்யும்.

இங்ஙன் உரைப்பன் இதற்கோர்—கதை
ஏற்றதுண் டால்அதைக் கேளீர்.

வேனிஸ் நகரத் திருந்த—வட்டி
வேண்டும் ஷையிலக் கெனும்பேய்த்

தன்மையன் தன்னலம் பேணி—ஓர்கால்
சாந்த குணத்தன் தயாளன்

வட்டியில்லாது பொருளைக்—கடன்
வாங்கு பவர்க்களித் திடுவோன்

அந்தோனியா வென்ற நல்லோன்—தன
தாருயிர் தன்னை அழித்தே

தன்பொருள் தன்னை வளர்க்க—ஒரு
தந்திரஞ் செய்தவன் மார்பின்

தசையில் ஒருபவு னெடையை—வேண்டித்
தந்தான் பெரும்பொருள் கடனாய்.

அவ்வுடம் பாட்டில் அந்தோணி—கால
அவதி கடந்தனன் ஐயோ !

சும்மா விடுவனோ ஷையிலக்—பாவி
தொடுத்தனன் காண்வழக் கொன்றை

‘என்ன முயற்சி செய்தாலும்—என்றும்
எய்துவ தாம் அறம் வெற்றி.’

என்றநல் லுரை பழுதாமோ—அவன்
ஏங்கித் தவித்துயிர் பெற்றே

தப்பிப் பிழைப்பத னுக்கே—அதில்
தம்பிரான் புண்ணியம் ஆச்சு.

ஆதலின் அறநெறிச் சென்றீண்—டென்றும்
அன்புபூண் டின்புற்று வாழ்வீர்.

———

# கடன் தொல்லையும் காக்கும் வழியும்

## நொண்டிச் சிந்து

ஆருயிர்த் தோழர்களே—உங்கட்
கரும்பொருள் பெருக இன்ருய்ந்துரைப்பேன்
கேளீர் கவனமுடன்—பின்னர்க்
கேட்டபடியே செய்யக் கீர்த்திபெறுவீர்
வருஷத் தொடக்கத்திலே—உற்ற
வரவு செலவுகளை வகைவகையாய்ப்
பகுத்துக் கொள்வீர் முதலில்—அங்ஙன்
பகுத்த படிநடந்து பழகிவந்தால்
வரவுக்கு மேலாகும்—வெறும்
வகையறி யாச்செலவே வாராவாம்
அன்றிஅந் நிலைதவறில்—உங்கட்
கான முதலின்மிக்கிங் கதிகமதாய்ச்
செலவா கும் அதனுல்—உள்ள
சீர்த்திநன் மானங்கெடும் திகழ்மதிபோம்
போன திசைக ளெல்லாம்—புகல்
பொல்லாப் பெயர்வருமே நல்லார்க்கும்
எல்லார் தமக்குங் கள்ளன்—என்றும்
எழ்பிறப்புள்ளும் தீயன் என்றும் உள்ள
இகழ்ந்த பெயர்களுமாம்—மற்றிங்
கின்னல் பலவும் சேரும் ஏறும் பொல்லாக்
கடனும்வந் தாட்கொளுமே—அந்தக்
கடனே ஒருவனுயர் கண்ணியத்தைக்
கட்கினிமையைக் கருத்தை—மற்றைக்
காணுங் குணங்களுயர் கொள்கைகள்
தம்மைத் துரத்திவிடும்—பொல்லாத்
தறுகணன் காலனுக்குச் சமமாமே
அன்றிலங் கையரசன்—களத்
தாண்டவ னிராமனம்பா லலைநிலைக்கோர்
கடன் கொண்டவர் நெஞ்சை—நல்ல

காட்டா எடுத்துரைப்பர் கற்றுலல்லோர்
அன்றிக்கைப் பொருளுளரேல்—அவர்க்
கறிவிலா ராயினும் அனையவரும்
எதிர்செல்வ ரேத்துவர்காண்—மற்றிங்
கில்லா னெனினவனை இல்லாளும்
ஈன்று வளர்த்தெடுத் தீண்—டிதம்
எண்ணும் தாயாருமிக எள்ளுவர் காண்
இவ்வுயர் உண்மைகளை—நித்தம்
இனிதி னுணர்ந்துபய னெய்திடவே
எண்ணங் கொண் டீராறல்—அதற்
கேற்றதாம் ஐக்கியச் சங்கம் அஃதோ
உண்மை சமம்உறுதி—நல்ல
ஊக்கம் உழைப்புதவி யாதியவாம்
செம்மைக் குணம் செயல்கள்—தம்மைச்
சேர்த்துத் தன்கையேதனக் குதவிசெய்யும்
என்றுயர் தத்துவத்தை—இங்ஙன்
எவர்க்கும் எதற்குமிணைத் துதவுமியல் .
வாய்த்தநற் கற்பகக்கா—அங்கே
வசித்து மகிழ்ந்துமிக வாழ அந்தச்
சங்கத்தின் வரன் முறையைத்—தந்த
சட்ட முறைகளைத் தக்கார் வாய்க்
கேட்டுத் தெரிந்து கொண்மின்—அந்தக்
கேடில் முறையில் வளர் கூட்டுறவின்
சங்கம் தனிற் சேர்மின்—இன்றேல்
சங்கம் தனைஉடனே தாபித்தே
முயலுமின் முன்னேற—மற்றும்
முதலிற் கடன்பட முந்தாதே
சிறு தொகையினை யேனும்—முதல்
சேரவரையறுத்துத் திட்டஞ் செய்தே
மிகுத்துவரப் பயில்மின்—அது
மிச்சம் பிடிக்கும் வழியோடுமித
வாழ்க்கைக்கு மார்க்கமதாம்—அன்றி

மறுக்கவொண்ணாத நிலைக்காட்பட்டே
கடன்பட நேர்ந்தக்கால்—அதைக்
கண்ணுங் கருத்துமாய்க் காலங்கள்
குறித்தண தவறுமல்—மீட்டும்
கொடுத்து வம்மின் உமக்குக் குறையேயில்லை
புகழும் பொருளும் உண்டாம்—இந்தப்
புண்ணியஞ் சேர் ஐக்கியக் கொள்கைகளும்
குவலயந் தனில் வளர்ந்தே—உயர்
குணங்கள் நிறைய நிதிக்கோனெனவே
வாழ்தற்கும் வழியாகும்—இந்த
மார்க்கமுரைத்தேன் கொண்டு மகிழ்வுறுவீர்
ஆருயிர்த் தோழர்களே.

## பண்டகசாலையின் பண்பு

### ஆனந்தக் களிப்பு

நல்ல மருந்திது காணீர்—நந்தம்
நாடிவ் வறுமைப் பிணிதவிர்த் தோங்க
நல்ல மருந்திது காணீர்.

1. ஏழைக் கெளியது காணீர்—மற்றும்
எல்லவ ருக்கும் இனியது காணீர்

2. ஒற்றுமைக் குற்றது காணீர்—உள்ள
ஒவ்வொரு வர்க்கும் உரியது காணீர்

3. கூறும் அதன்குணம் காணீர்—அன்பாய்க்
கூடிற் சமபலன் கூடிடும் காணீர்

4. தேர்ந்த சுதந்தரம் காணீர்—இதிற்
சேர்ந்தவர்க் காக்கம் செழித்திடும் காணீர்

5. முதலின்றி மிகுதியாம் காணீர்—இதை
முற்றுங்கைக் கொண்டால் முதலாகும் காணீர்

6. கடனைக் காணாதது காணீர்—எந்தக்
கடனையும் போக்கிக் களிப்பது காணீர்

7. முதலாளியே இல்லை காணீர்—இந்த
முறைபயின் றாரே முதலாளி காணீர்

8. தொழிலாளி யும்இல்லை காணீர்—இந்தத்
தூய முறையே தொழில்முறை காணீர்

9. அடிமைப் பெயரில்லை காணீர்—இதில்
அண்டினர் யாரும் அரசராம் காணீர்

10. மனைக்காம் பலபொருள் காணீர்—அவை
வாங்கி வரவே வரும்பலன் காணீர்

11. போகப் பொருளிவை காணீர்—அவை
புவியுலு ளோர்க்குப் பொதுப்பொருள் காணீர்

12. அன்பென்ப தொன்றுண்டு காணீர்—இந்த
அவனியுள் ளோர்க்கரு ளேபொருள் காணீர்

13. நானில்லை எனதில்லை காணீர்—அன்றி
நீ இல்லை உனதில்லை என்பதும் காணீர்

14. நாமென்ப தொன்றுண்டு காணீர்—மற்றும்
நமதே அனைத்தென்று நாட்டுவம் காணீர்

15. காணீர் அதன்பெயர் காணீர்—நல்ல
கற்பகக் கூட்டுப் பண்டகசாலை காணீர்

நல்ல மருந்திது காணீர்—நந்தம்
நாடிவ் வறுமைப் பிணிதவிர்த் தோங்க
நல்ல மருந்திது காணீர்.

Printed at the Royal Printing Works, Mount Road, Madras